# நினைவிருக்கட்டும், வைட்டமின் மற்றும் மினரல் பற்றுக்குறையால் உங்கள் குழந்தை அவதிப்படாமலிருக்க, ஊட்டச்சத்துமிக்க சமநிலை உணவு தேவை.

## "ஆகவேதான் என் குழந்தைக்கு செரிலாக் தருகிறேன்."

உங்களுக்குத் தெரியுமா, சமச்சீராக உள்ள வைட்டமின்களும், மினரல்களும் ஊட்டச்சத்துகளை உறிஞ்ச உதவுகின்றன என்பது? போஷாக்குப் பற்றாக்குறையினால் குழந்தை அவதிப்படாமலிருக்க இது வகை செய்கிறது.

உங்கள் டாக்டரைக் கேளுங்கள். இந்த வைட்டமின்களையும் மினரல்களையும், போஷாக்குச் சத்துகள் சமச்சீராக உள்ள உணவின் மூலம் பெறுவதுதான் சிறந்த வழி என்பார். அந்த உணவில், புரோட்டீன்கள், கார்போஹைட்ரேட்கள், கொழுப்பு, இரும்பு மற்றும் கால்ஷியம் சத்துகளும் சரியான விகிதத்தில் இருக்கவேண்டும். ஒவ்வொரு வேளை உணவிலும், ஒவ்வொரு நாளும்!

வழக்கமான உணவுகள் மூலம் இந்த எல்லா சத்துக்களையும் தருவது பெரும்பாலான தாய்மார்களுக்கு எளிதல்ல.

இதற்குத் தீர்வு?

செரிலாக். குழந்தைகளுக்கு நான்கு மாதம் முதல் வெறும் பால் உணவு மட்டும் போதாது. ஆகவே அப்போது முதல் தரக்கூடியது, ஊட்டச்சத்துக்களைச் சமச்சீராகக் கொண்ட திட உணவான செரிலாக்.

செரிலாக் ஏ, டி, சி, பி காம்ப்ளெக்ஸ் மற்றும் ஈ வைட்டமின்களால் செறிவூட்டப்பட்டிருக்கிறது. மேலும், இதில் புரோட்டீன், கார்போஹைட்ரேட்கள், கொழுப்பு, இரும்பு மற்றும் கால்ஷியம் சத்துக்களும் உள்ளன-அனைத்தும் சரியான விகிதத்தில், குழந்தைகள் மிகவும் விரும்பும் சுவையுடன்!

ஆகவே போஷாக்குச் சத்துகளைச் சமச்சீராகக் கொண்ட செரிலாக் அனுகூலத்தை உங்கள் குழந்தைக்கு அளிக்கத் துவங்குங்கள். குழந்தைக்கு 6 மாதம் ஆனதும் வீட்-ஆப்பிள், வீட்-ஆரஞ்சு, மற்றும் வீட்-வெஜிடபிள் ஆகியவற்றின் கூடுதல் அனுகூலங்களை அளியுங்கள்.

பேக்கின் மீதுள்ள விதிமுறைகளைப் பின்பற்றுக.

இலவசம்: செரிலாக் பேபி கேர் புத்தகம்

எழுதுங்கள்: செரிலாக், போஸ்ட் பேக் நம்பர்-31, புது தில்லி-110025

நெஸ்லேயின் ஒரு தரமான தயாரிப்பு




**உங்கள் குழந்தைக்கு அளியுங்கள் செரிலாக்.**

# ஜெயிலுக்குப் போகவேண்டிய டாக்டர்கள்!

மருத்துவ உலகில் விஞ்ஞான அற்புதங்கள் எவ்வளவோ நிகழ்ந்து வருகின்றன. இந்த முன்னேற்றங்களால் நோய்ச் சிகிச்சையை எளிமைப்படுத்தி விட்டதாகக் கருதப்படுகிறது. உண்மைதான். ஆனால் மறு பக்கம் உண்டு. அது பிரபலப்படுத்தப் படுவதில்லை.

நவீன மருத்துவ உபகரணங்களும் மனிதன் மீதுதான் பிரயோகிக்கப்படுகின்றன. சரீரம்தான் அத்தனையையும் தாங்க வேண்டும். இது நோயாளியின் பாரத்தை அதிகரிக்கிறது. (பணச்சுமை — தனிக்கதை!) மற்றொரு அம்சம், இந்த அதி நவீன உபகரணங்களைப் பயன்படுத்துகிற டாக்டர்களின் ஆற்றல் முன்னெப்போதையும் விடப் பன்மடங்கு கூடுதலாக இருந்தாக வேண்டும். இல்லாவிட்டால், நவீன உபகரணங்களின் பலனை நாம் இழப்பதோடு, அவற்றைத் தவறாகவோ கவனக் குறைவாகவோ பிரயோகிப்பதால் ஏற்படும் உபாதைகளையும் நோயாளி தாங்க வேண்டியவனாகிறான்!

முன்பு உடலைக் கிழித்துச் செய்த பல்வேறு ஆயுத சிகிச்சைகளை இப்போது உடலைக் கிழிக்காமலே, உடல் துவாரங்கள் மூலம் (அல்லது சிறு துவாரங்களை ஏற்படுத்தி) உபகரணங்களை உட்செலுத்திச் செய்கிறார்கள். இது மாபெரும் முன்னேற்றமாய் இருக்கலாம். ஆனால் இதற்குத் தேவைப்படும் ஆற்றலும் கலைத் திறனும் பன்மடங்கு அதிகரித்திருக்கிறது. ஆம், ஆயுத சிகிச்சையில் கலை நுணுக்கமும் இன்றியமையாதது. நமது இளம் டாக்டர்கள் இந்தச் சவால்களையெல்லாம் சந்தித்து வெற்றி கொள்ளக்கூடிய சூழ்நிலை, நமது மருத்துவக் கல்லூரிகளில் நிலவுகிறதா? மருத்துவப் படிப்பு தரத்தில் எந்த அளவுக்கு முன்னேறியிருக்கிறது?

பல நவீன உபகரணங்கள் அயல்நாடுகளிலிருந்து தருவிக்கப்படுகின்றன. சில எளிய உபகரணங்கள் இங்கே தயாரிக்கப் படுகின்றன. உதாரணமாக, எய்ட்ஸ் நோய் பிரபலமடைந்த பிறகு, ஒருமுறை பயன்படுத்தப்பட்ட ஊசியை, மறுமுறை கொதிக்க வைத்த பிறகு கூட பயன்படுத்துவதில்லை. எனவே, டிஸ்போஸபிள் (எறிந்து விடக்கூடிய) ஸிரிஞ்சுகள், ஊசிகள் நிறையத் தயாராகின்றன. இந்த எளிய உபகரணங்கள் கூட நம் நாட்டில் சரியாகத் தயாராவதில்லை என்பது உண்மை. ஒரு ஸிரிஞ்சைப் பயன்படுத்த ஆரம்பித்த டாக்டர், மருந்து வழிவதைக் கண்டு அதிர்ச்சியுற்று, வெறுப்பும் கோபமுமாக அதனைக் குப்பைத் தொட்டியில் எறிந்து விட்டு, "இனிமேல் இந்த பிராண்ட் ஸிரிஞ்சே வாங்காதே" என்று உத்தரவு போடும் காட்சி அபூர்வமானது அல்ல. இது போன்ற சம்பவங்கள், 'செய்நேர்த்தி என்பது நமது இயல்பிலேயே இல்லை' என்பதை உணர்த்துகிறவை.

விஞ்ஞான முன்னேற்றத்தைப் பிரயோகிப்பவன் டாக்டர். பயன்பெறுபவன் நோயாளி. இந்த இருவர் இடையே நல்லுறவு இருந்தால் கூடப் போதாது; சம அந்தஸ்து நிலவுவது அவசியம். இன்று ஒரு சராசரி நோயாளி, ஏழைமை அல்லது அறியாமை காரணமாக, ஒரு டாக்டரைத் தன்னைக் காக்க வந்த தெய்வம் போல் எண்ணுகிறான். டாக்டரோ, இயந்திர கதியில் நோயாளியை 'மேலும் ஒரு கேஸ்' என்று கருதுகிறார். இந்த விஷ நோய்க்கு முதலில் வைத்தியம் பண்ணி ஆக வேண்டும். டாக்டர் — நோயாளி ஆகிய இருவரும், பொருளாதார, அறிவாற்றல் நிலைகளில் என்னதான் வேறுபட்டிருந்தாலும், இருவருமே மனித ஜீவன்கள் என்ற அளவில் சம அந்தஸ்து பெற்றவர்கள். இதை இரு தரப்பினரும் உணர்ந்தால்தான் நோயாளி, விஞ்ஞான முன்னேற்றத்துக்குத் தான் சோதனைக் களமாகும் நிலையிலிருந்து தப்புவான்.

தனக்குச் செய்யப்படவிருக்கும் சிகிச்சை என்ன, அதன் பின்விளைவு என்ன, உடன் விளைவு என்ன, என்னென்ன முன்னெச்சரிக்கை நடவடிக்கைகள் மேற்கொள்ளப் பட வேண்டும் என்றெல்லாம் கேட்டுத் தெரிந்து கொள்ளும் தைரியம் நோயாளிக்கு வர வேண்டும். இயன்றமட்டில் விளக்கும் பொறுமை டாக்டருக்கு இருக்க வேண்டும். ஒரு டி அண்டு ஸி செய்த பிறகோ, ஒரு ஸிஸ்டோஸ்கோப்பி செய்த பிறகோ மருத்துவ அறிக்கை எழுதித் தராமல் இருக்கும் டாக்டர், கம்பி எண்ண வேண்டியவர். இத்தகையவர்களைத் தட்டிக் கேட்கும் துணிவு இன்று எத்தனை நோயாளிகளுக்கு இருக்கிறது?

# சிறுநீரக மாற்று அறுவைச் சிகிச்சையும், சில சமூகச் சிக்கல்களும்

**மாற்றுச் சிறுநீரகம் பொருத்துவதென்பது, மிகுந்த செலவு பிடிக்கும் விஷயம் மாத்திரமல்ல; அதனால் சில சமூகச் சிக்கல்களும் ஏற்படுகின்றன. அந்தச் சிக்கல்களை விவரிக்கிறார் டாக்டர் எம். எஸ். வெங்கட்ராமன்.,:**

நமது உடலில் அன்றாடம் சேர்ந்து வரும் சிலவகை உப்பு, நீர், யூரியா போன்ற சில வளர்சிதை மாற்றப் பொருள்களை அவ்வப்போது அகற்றியாக வேண்டும். அந்தப் பணியைத்தான் நமது உடலிலுள்ள இரண்டு சிறுநீரகங்களும் செய்து வருகின்றன. இரண்டில் ஒன்று பழுதுபட்டுப் போனாலும் பிரச்னையில்லை; இன்னொன்று அந்தப் பணியைச் செய்துவிடும். ஆனால், இரண்டுமே பழுதுபட்டுப் போகும் போதுதான் உயிருக்கே ஆபத்து என்கிற நிலை உருவாகிறது.



• டாக்டர் எம். எஸ். வெங்கட்ராமன்

இருப்பினும் வளர்ந்துவரும் இன்றைய விஞ்ஞான உலகில் அதற்கும் மாற்றுவழி கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறது. அதுதான் டயாலிஸிஸ் முறை மற்றும் சிறுநீரக மாற்று அறுவைச் சிகிச்சை முறை. டயாலிஸிஸ் என்பது சிறுநீரகங்கள் செய்ய வேண்டிய பணியை — அவை பழுதுபட்டுப் போன காரணத்தால் — செயற்கையாக இயந்திரங்களைக் கொண்டு செய்வது. இதை ஒவ்வொரு முறையும் இரண்டு மூன்று மணி நேரம் செலவழித்து, வாரத்திற்கு இரண்டு முறை செய்து கொள்ள வேண்டும். இதற்கு மாதம் ஒன்றுக்குச் சுமார் ஆறாயிரம் ரூபாய் வரை செலவாகும்.

மாற்றுச் சிறுநீரகம் பொருத்தப்பட்டு விட்டால் டயாலிஸிஸ் முறையை நிறுத்தி விடலாம். அதற்குத் தம்மிடமுள்ள இரண்டு சிறுநீரகங்களில் ஒன்றைத் தானம் செய்வதற்கு ஒருவர் முன்வர வேண்டும். அதுவும் சம்பந்தப்பட்ட நோயாளியின் உடலுக்குப் பொருந்துகிற ரத்த குரூப் உள்ளவர் தானம் செய்ய வேண்டும்! அப்படியொருவர் முன் வருகிறபோது, அவருடைய சிறுநீரகத்தைப் பத்திரமாக அறுவைச் சிகிச்சை செய்து வெளியிலெடுப்பதற்கு ஒரு மருத்துவக் குழு, சிறுநீரகத்தைப் பெற்றுக் கொள்பவருக்கு அறுவைச் சிகிச்சை செய்ய மற்றொரு மருத்துவக் குழு, எடுத்த சிறுநீரகம் நோயாளியின் உடலில் பொருத்தப்படும் வரை அதைக் குளிர்ந்த உப்புநீரில் கழுவிப் பாதுகாத்து வைத்துக் கொள்ள வேறொரு குழு, மற்றும் நர்ஸ்கள், மயக்க மருந்து கொடுக்கும் மருத்துவர்கள், அறுவைச் சிகிச்சையின் போது தேவைப்படும் ரத்தத்தை ஏற்பாடு செய்ய ஒரு குழு, சிறுநீரகம் பொருத்தப்பட்ட பின்னர், அதைச் சம்பந்தப்பட்டவரின் உடல் ஏற்றுக் கொள்கிறதா என்பதையறியும் இரத்தப் பரிசோதனைகள், ஸ்கான் பரிசோதனைகள், மருந்துகள் என்று ஏராள விஷயங்கள்.

இதற்கான மருந்துகளில், சைக்லோஸ்போரின் **(Cyclosporin)** என்பது மிகவும் விலையுயர்ந்த மருந்து என்பதால் டாக்டர்களெல்லாம் இலவசமாகவே சிறுநீரக மாற்று அறுவைச் சிகிச்சையைச் செய்தாலும் கூட சுமார் அறுபதாயிரம் ரூபாய் வரை செலவு செய்ய வேண்டியிருக்கிறது. இத்தனைக்குப் பிறகும் மாற்றுச் சிறுநீரகம் பொருத்தப் பட்டவர்கள் ஐந்திலிருந்து பத்தாண்டுகள் வரைதான் டயாலிஸிஸ் செய்யாமல் வாழ முடிகிறது. இன்றுள்ள விஞ்ஞானத்தில் அவர்களுக்கு நிரந்தரமான நீண்ட கால வாழ்வைத் தரமுடியவில்லை என்பதும் உண்மையே!



'சிறுநீரகம் தானம் கொடுப்பவர்கள் பற்றி இன்றைக்கு ஒரு பெரிய பிரச்னையும் ஏற்பட்டிருக்கிறது. உறவல்லாதவர்கள் வெறும் பணத்திற்காக மட்டும்தான் தங்கள் சிறுநீரகங்களில் ஒன்றைக் கொடுக்கிறார்கள். பணத்திற்காக மட்டுமே ஒருவர் தமது உடலுறுப்பில் ஒன்றைத் தருவது வியாபாரமாகாதா? இதற்கும் வேசித்தனத்திற்கும் என்ன வித்தியாசம் என்று ரொம்பவும் கடுமையாகக் கேட்பவர்களும் இருக்கத்தான் செய்கிறார்கள்.

இப்படிக் கேட்பவர்களுக்கு ஒன்று. ஒருவன் தன்னுடைய உடலுறுப்பில் ஒன்றைப் பணத்திற்காக விற்பதற்கு முன் வருகிறான் என்றால் அவனுக்கு எப்படிப்பட்டதோர் பொருளாதாரக் கஷ்டம் இருக்க வேண்டும்! அவனுடைய பொருளாதாரக் கஷ்டத்தைப் போக்குவதற்கு முயலாதவர்கள், அவன் சிறுநீரகத் தானம் கொடுப்பதை மட்டும் கடுமையாக விமர்சனம் செய்வதில் என்ன நியாயம் இருக்கிறது?

ஆயினும் இந்தச் சிறுநீரகத்தான விஷயத்தில் சில இடைத்தரகர்கள், ஒன்றுமறியாத ஏழைகளை ஏமாற்றுகிறார்கள் என்பதும் உண்மை தான். அதைத் தடுக்க வேண்டுமானால், சிறுநீரக வங்கிகள், திசு வங்கிகள் உருவாக வேண்டும். அதில் சிறுநீரகத்தானம் கொடுப்பவர்களின் பெயர், முகவரி, இரத்த குருப் போன்ற விஷயங்களைப் பதிவு செய்து வைத்துக்கொண்டால், தேவையுள்ள போது, தேவையான நபர்களை நேரடியாகவே தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். இந்த நிலை இன்னும் உருவாகாததால், தானம்கொடுக்கவிரும்புவோருக்கும், தானம் பெறுவோருக்கும் இடையில் வழக்கறிஞர் ஒருவர் முன்னிலையில் ஓர் ஒப்பந்தம் செய்து கொள்ளும் முறையைக் கைக்கொண்டால் இடைத்தரகர்களை அடியோடு ஒழித்துவிடலாம்.

அடுத்தது அன்பு, பாசம் போன்ற காரணங்களினால் சம்பந்தப்பட்டவரின் உறவினர்களில் ஒருவரே சிறுநீரகத் தானம் செய்ய முன்வருவது. நெருங்கிய உறவினர்களெல்லாம் எந்தவிதமான வெளி நிர்ப்பந்தங்களுமில்லாமல் உண்மையிலேயே நோயாளியின்பாலுள்ள அன்புக்காகவும் பாசத்துக்காகவும்தான் சிறுநீரகத் தானம் செய்ய முன்வருகிறார்களா? கூர்ந்து நோக்கினால், அதிலும் ஒருவிதக் குடும்ப நிர்ப்பந்தம் இருக்கவே செய்கிறது.

'இந்த நோயாளிக்கு மாற்றுச் சிறுநீரகம் தேவைப்படுகிறது; அப்பொழுது தான் அவர் பிழைப்பார் என்று கூறியவுடன் அனைத்து உறவினர்களும் அந்த நோயாளியின் தாயை 'அர்த்தமுள்ள' பார்வை பார்ப்பதும் அவர் கடவுளை வேண்டிக் கொள்வது போல் மேலே பார்ப்பதும் அடிக்கடி நடக்கிற ஒரு விஷயம்தான்!' என்கிறார் எனது சக மருத்துவ நண்பர் ஒருவர். இது ஒருவித நிர்ப்பந்தம் அல்லாமல் வேறென்ன?

இதிலும்ஒரு வேடிக்கைஎன்னவென்றால், இந்தச் சிறுநீரகத்தான விஷயத்தில் கூட, ஆணாதிக்கம் மேலோங்கியிருப்பதுதான்! சென்னையிலுள்ள ஒரு பெரிய மருத்துவமனையின் சமீபகாலப் புள்ளி விவரங்களைப் பார்த்தபோது, இந்த அதிர்ச்சி தரும் உண்மை விளங்கியது. சிறுநீரகத் தானம் செய்த இருபது பெற்றோரில் பதினேழு பேர் தாய்மார்கள்தான்; மூன்றே பேர்தான் தந்தையர்கள்! இதே போல் கணவனுக்கு மனைவி தானமளித்ததாகத்தான் அந்தப் புள்ளி விவரங்கள் சொல்கின்றனவே தவிர, மனைவிக்குக் கணவன் தானமளித்ததாகக் காணவே காணோம்!

மிக நெருங்கிய உறவினர்களின் கதியே இப்படியென்றால் தூரத்து உறவினர்கள் பற்றிக் கேட்கவே வேண்டாம். தானம் கொடுத்த சிறு நீரகத்திற்குப் பிரதியுபகாரமாக ஆஸ்தியிலேயே பங்கு கேட்கிறார்கள் அவர்கள். இந்த நிலையில் ஒரு குறிப்பிட்ட் தொகைக்கு, உறவ் சம்பந்தமே இல்லாத ஏழையொருவன் தானம் கொடுக்க முன்வருவதில் வெறும் பணத்தாசை மட்டும் தான் — வியாபாரம் மட்டும்தான் முதன்மையாக இருக்கிறது என்று எப்படிச் சொல்லிவிட முடியும்?

இம்மாதிரியான சிக்கல்களைத் தீர்ப்பதற்காகத்தானோ என்னவோ, மேல் நாடுகளில், 'இறந்தவருடைய சிறுநீரகங்களை எடுத்துப் பொருத்துவதுதான் சரி' என்று சட்டமே இயற்றப்பட்டுள்ளது. ஆரோக்கிய

மான இளைஞர்கள் விபத்துக்களில் இறக்கும் போதும், வயதாகி இறப்போரின் சிறுநீரகங்கள் பயன்படக் கூடிய நிலையில் இருக்கும் போதும் அவற்றை எடுத்துப் பொருத்தலாம் தான்.

ஆனால், மாற்றுச் சிறுநீரகம் தேவைப் படுவோரின் எண்ணிக்கை அதிகமாக இருப்பதால் காத்திருப்போர் பட்டியலும் நீண்டு கொண்டே போகிறது. உதாரணத்திற்குச் சென்னை நகரை மட்டும் எடுத்துக் கொண்டால் கூட, ஆண்டொன்றுக்குச் சுமார் முந்நூற்றைம்பது பேருக்குமேல் மாற்றுச் சிறுநீரகத்திற்காகக் காத்திருக்கும் நிலை. இறந்தவர்களின் சிறுநீரகங்களை மட்டும் தான் இவர்களுக்கு எடுத்துப் பொருத்தியாக வேண்டும் என்கிற கட்டாயம் ஏற்பட்டால், தமிழ்நாடு முழுவதிலுமாக ஆண்டுக்குச் சுமார் இருநூறு சிறுநீரகங்களுக்கு மேல் கிடைக்காது. இந்தப் பற்றாக்குறை முன்னேற்றமடைந்த நாடுகளையும் விட்டு வைக்கவில்லை.

ஆக, இருக்கிற பிரச்னைகளை விஞ்ஞானம் தீர்த்து வைக்கிற போது, அதன் மூலம் பல புதிய பிரச்னைகளும் தோன்றத் தான் செய்கின்றன. இதற்கு இந்தச் சிறுநீரக மாற்று அறுவைச் சிகிச்சையே மிகச் சிறந்ததோர் உதாரணம்!

**— டாக்டர் எம். எஸ். வெங்கட்ராமன்**

# மூலிகையில் மருந்துகள்...

**சென்னை** டி.டி.கே. பார்மாவின் ஒரு பிரிவு, மூலிகை மருந்துகளை, முறையான ஆராய்ச்சிகளுக்குப் பிறகு விற்பனைக்குக் கொண்டு வந்திருக்கிறது. இதன் விற்பனை அதிகாரி டாக்டர் கமால் அவர்களைச் சந்தித்துச் சில கேள்விகள் கேட்டோம்:

● மூலிகை மருந்துகளும் ஆயுர்வேத மருந்துகள் மாதிரிதானே?

ஆமாம். ஆயுர்வேத மருந்துகளும் மூலிகைகளிலிருந்துதான் தயாரிக்கப்படுகின்றன. ஆயுர்வேத வைத்திய நிபுணர்கள்தாம் இந்த மூலிகைகளை ஆராய்ச்சி செய்து, இன்ன வியாதிக்கு இந்த மருந்து என்று நிர்ணயிக்கிறார்கள்.

● அப்படியானால் இவற்றைச் சாப்பிடும்படி ஆலோசனை அளிப்பவர்கள் ஆயுர்வேத மருத்துவர்கள்தானா?

ஆம். ஆனால் இந்த மருந்துகள் ஆயுர்வேத மருந்துக் கடைகள் அல்லாமல், எல்லா மெடிக்கல் ஷாப்களிலும் கிடைக்கும். மூலிகை மருந்து என்றால் ஏதோ வேரும், செடி கொடிகளாகவும் இருக்கும் என்று நினைக்க வேண்டாம். இவை மாத்திரைகளாகவும், டானிக்குகளாகவும், சுலபமாக விழுங்குகிற வகையில்தான் விற்பனைக்கு அனுப்பப்படுகின்றன.

● மூலிகைகள் ஏராளமாய் இருக்கின்றன. எதெதற்கு என்னென்ன மூலிகை என்றெல்லாம் பகுத்தறிய ஆராய்ச்சிக்கூடம் அமைத்திருக்கிறீர்களா?

பல்லாவரத்தில் எங்களது நவீன ஆராய்ச்சிக் கூடத்தில் பரிசோதனைகள் செய்கிறோம். முதலில் பிராணிகள் மூலம் பரிசோதித்துப் பார்த்து, பிறகு மனிதர்களுக்குக் கொடுத்து, எங்களுக்குத் திருப்தியான முடிவு கண்ட பிறகே, விற்பனைக்குக் கொண்டு வருகிறோம்.

● இத்தனை அல்லோபதி மருந்துகள் இருக்கும் போது மூலிகை — ஆதாரமான மருந்துகளுக்கு வாய்ப்பும், வரவேற்பும் இருக்கிறதா?

தாராளமாக! சில நோய்களுக்கு அல்லோபதி மருந்துகள் கிடையாது. அந்தச் சமயங்களில் மூலிகை — ஆதாரமான மருந்துகள் வெகுவாகப் பயன்படும்.

● இதுவரை எத்தனை மூலிகை மருந்துகளை விற்பனைக்கு அறிமுகப்படுத்தியிருக்கிறீர்கள்?

இருமலுக்கு; ஈரல் சம்பந்தமான நோய்களுக்கு (உதாரணமாக மஞ்சள் காமாலை); குழந்தைகளின் பொதுவான நல வாழ்வுக்கு, பெண்களுக்கு ஆண்களுக்கு என்று ஆறு மருந்துகள்.

● மூலிகை உங்களுக்கு எங்கிருந்து கிடைக்கின்றன?

இந்தியாவின் பல பாகங்களிலிருந்தும் வருகின்றன. நாங்களும் விவசாயிகளை, மூலிகைப் பண்ணைகள் வளர்க்கச் சொல்லி வாங்கிக்கிறோம்.

● எந்தெந்த நாடுகளுக்கு மூலிகை மருந்துகளை ஏற்றுமதி செய்கிறீர்கள்?

ரஷ்யா, சிங்கப்பூர், மலேஷியா, சௌதி அரேபியா, மத்திய கிழக்கு நாடுகள், ஜெர்மனி, சில ஐரோப்பிய நாடுகள்.

''இயற்கையையும் அறிவியலையும் இணைக்கும் இம் முயற்சியில் வெற்றி கண்டவர் என்று இதன் தலைவர் டி.டி. நரசிம்மன் அவர்களைச் சொல்ல வேண்டும். அவர்தான், காலங் காலமாக நம் நாட்டில் பயன்படுத்தப்பட்டு வந்த மூலிகைகளை, இன்றைக்கும் மக்கள் நம்பிக்கையோடு உபயோகிக்கும் விதத்தில் வழங்க முன் வந்தவர்!'' என்கிறார் டாக்டர் கமால்.

**— சாருகேசி**

# முதன் முதலாக, முதியோருக்காக...

முதியவர்களுக்கென்று வெளிநாடுகளில் தனியான மருத்துவமனைகளே இருக்கின்றன. நம் நாட்டில் அப்படி யில்லை. கடந்த 88 – ஆம் ஆண்டுதான் இந்தியாவிலேயே முதன் முதலாகச் சென்னையிலுள்ள பொது மருத்துவமனையில் முதியோருக்கென்று தனியாக 'மூப்பியல் மருத்துவப் பிரிவு' ஒன்று துவங்கப்பட்டுள்ளது. அதற்குக் காரணமானவரும் இந்தியாவிலேயே முதன் முதலாக மூப்பியலைச் சிறப்புப் பாடமாக எடுத்துப் படித்தவருமான டாக்டர் வி. எஸ். நடராஜனைச் சந்தித்தோம்.

''பொதுவான மருத்துவமனைகளிலேயே முதியவர்களுக்கான சிகிச்சைகளைச் செய்யும் போது, இப்படியொரு பிரிவைத் தனியாகத் துவங்க வேண்டியது அவசியந்தானா?'' என்று கேட்ட போது, ''அவசியந்தான்!'' என்று அடித்துச் சொல்லுகிறார் அவர்.

''முதியவர்களுக்கென்றே வரும் சில நோய்கள் இருக்கின்றன. அவை எந்தவிதமான வெளியடையாளங்களும் இல்லாமல் வருகின்றன. உதாரணமாக வலியில்லாத இருதய நோய், காய்ச்சல் வராமலேயே நிமோனியா, பித்தநீர்ப்பை பழுதடைதல் என்று வர வாய்ப்புகள் இருக்கின்றன. இவற்றோடுஎண்பதுவயது முதியவர்ஒருவர், மற்றவர்களோடு சேர்ந்து காத்திருந்து சிகிச்சை பெறுவதென்பது முடிகிற காரியமுமல்ல. அதனால்தான் சென்னைப்பொது மருத்துவமனையில் மட்டுமல்லாமல் கே.கே. நகர், அண்ணா நகர், தண்டையார்ப்பேட்டை ஆகிய இடங்களிலும் புறநகர் வயோதிகர் மருத்துவப் பிரிவுகளை ஏற்படுத்தியிருக்கிறோம்.

''அப்புறம் இன்னொரு முக்கியமான விஷயமும் இருக்கிறது. தான் முதுமையடைந்து விட்டதால் தன்னால் தமது குடும்பத்தாருக்கு எந்தவிதமான பயனுமில்லையே என்கிற எண்ணத்தால் வருகிற ஒருவிதத் தாழ்வு மனப்பான்மை; அல்லது முதுமை



• 107 வயது வரை வாழ்ந்து சமீபத்தில் காலமான முத்து என்ற முதியவருடன் டாக்டர் வி. எஸ். நடராஜன்...


அடுத்த இதழில்...

●● ஜெயலலிதா முதல்வரானால் எப்படி நடந்து கொள்வார்?
— ஓர் அலசல்

காரணமாகவே இவர்களைக் குடும்பத்திலுள்ள மற்றவர்கள் ஒதுக்கி வைக்கிற நிலைமையால் ஏற்படும் தனிமை உணர்வு...

''இப்படிப்பட்ட சூழ்நிலையிலிருக்கும் முதியவர்களின் குடும்பத்தாரை அழைத்துப் பேசுகிறோம். இதற்குச் சில சமூக சேவை நிறுவனங்களும் எங்களுடன் ஒத்துழைக்கின்றன. முதுமை என்பது அனைவருக்கும் வரக் கூடிய தவிர்க்க முடியாததொரு பொது விஷயம்; அது ஒதுக்கப்படுவதற்குரிய விஷயமல்ல என்பதையும் முதியோருக்கான சத்துணவுகள் பற்றியும் குடும்பத்தாரிடம் எடுத்துச் சொல்லுகிறோம். இது நல்ல பலனைத் தருகிறது என்றாலும் சிலர் எப்படியாவது தங்கள் வீட்டிலுள்ள முதியோர்களை எங்காவது கொண்டு போய் அனாதையென்று சொல்லிச் சேர்த்துவிடச் செய்கிறார்கள் என்பதும் கசப்பான உண்மைதான்...'' என்ற டாக்டர் வி. எஸ். நடராஜன், பொது மருத்துவ மனையிலுள்ள முதியோருக்கான தனிப்பிரிவுக்கு நம்மை அழைத்துச் சென்றார்.

அங்கிருந்த எழுபத்தெட்டு வயது மூதாட்டி ஒருவரை நமக்கு அறிமுகப் படுத்தினார். (அந்த வார்டுதான் எத்தனை சுத்தமாக இருக்கிறது!) அவருடைய கால் எலும்பு முறிந்து படுத்த படுக்கையான போது உடலெங்கும் தழிப்புண்கள் ஏற்பட்டுக் கவனிப்பாரற்ற நிலையிலிருந்த போதுதான் இங்கு கொண்டு வந்து சேர்த்தார்களாம். ''இந்த மூதாட்டியின் விஷயத்திலுள்ள கொடுமையான செய்தி என்னவென்றால், இவர் நலமாகி வீடு திரும்புவதை இவருடைய வீட்டிலுள்ள யாருமே விரும்பவில்லை என்பதுதான்!'' என்று டாக்டர் நம்மிடம் சொன்ன போது, நமக்கும் அதிர்ச்சியாக இருந்தது.

''இதுபோன்ற சூழ்நிலைகளிலும் சில முதியோர் இருப்பதால், அவர்கள் இருக்கிற வரையாவது நோய்களால் கஷ்டப்படாமல் சந்தோஷமாக இருப்பதற்கு நாம் ஏதாவது செய்தாக வேண்டாமா? முன்பு நமது மக்கள் தொகையில் இரண்டு சதவீதமாக மட்டுமே இருந்த முதியோரின் எண்ணிக்கை இப்போது பதின்மூன்று சதமாக உயர்ந்திருக்கிற காரணத்தால், முதியோரின்பால் நாம் இன்னும் அதிகக் கவனம் செலுத்த வேண்டியிருக்கிறது. இந்த நிலையில் எம். ஜி. ஆர். மருத்துவக் கல்லூரியில் இப்போது மூப்பியலை ஒரு சிறப்புப் பாடமாக வைக்கவும் அங்கீகாரம் கிடைத்துள்ளது ஒரு மகிழ்ச்சியான விஷயம்...!'' என்கிறார் அனைத்திந்திய முதியோர் மருத்துவச் சங்கத்தின் தலைவராக இப்போது தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் டாக்டர் வி. எஸ். நடராஜன்.

— பானுமதி இராமச்சந்திரன்

---

## மருத்துவச் செலவுக்கு இன்ஷ்யூர் செய்யலாம்!

வெளிநாடுகள் பலவற்றில், மருத்துவ மனையில் சிகிச்சைப் பெற இன்ஷ்யூர் செய்து கொள்ளும் வழக்கம் இருக்கிறது. இந்தியாவில் இந்த முறை சமீப காலமாகப் பரவி வருகிறது. தனியார் மருத்துவ மனைகள் பல, இன்ஷ்யூரன்ஸ் நிறுவனங்களுடன் இணைந்து இந்த வசதியைச் செய்து வருகின்றன. வருடாந்தர ப்ரீமியம் தொகையைப் பொறுத்து, பாலிசி தொகை, அதாவது சிகிச்சைத் தொகை, நிர்ணயிக்கப்படுகிறது. இதில் மருத்துவ மனையில் தங்கிச் சிகிச்சை பெறும் வசதியும், புறநோயாளியாக வீட்டிலிருந்தபடியே சிகிச்சை பெறும் வசதியும் உண்டு.

ஐந்து முதல் எழுபது வயது வரை இத்திட்டத்தில் சேர்க்கப்படுகிறார்கள். மருத்துவர்கள் பீஸ், மருத்துவ நிபுணர்கள் பீஸ், பரிசோதனைச் செலவுகள், அறை வாடகை என்று இந்த இன்ஷ்யூரன்ஸ் உதவுகிறது. வருடாந்தர ப்ரீமியம் 250 ரூபாய் கட்டினால், 10,500 ரூபாய்க்குச் சிகிச்சை வசதி; வருடாந்தர ப்ரீமியம் 1,350 ரூபாய் செலுத்தினால் 82,500 ரூபாய்க்கு மருத்துவ வசதி. இம்மாதிரி வசதி எல்லா நோய்களுக்கும் இல்லை. கண் பரிசோதித்துக் கண்ணாடி போட, பல் வைத்தியம் செய்து கொள்ள என்று நிறைய இட்டங்களுக்குக் கிடையாது!

# உதவும் கரங்களுக்கு உதவுங்கள்

## பேரன்புமிக்க பெரியீர்:-




நமஸ்காரம், நாம் யாவரும் எம்மதத்தின ராயினும் நம் குடும்பத்தில் அனேக சந்தோஷ வைபவங்கள் - உதாரணமாக குழந்தைகள் பிறந்த நாள், அவர்களது கல்யாணம் முதலியவை கொண்டாடுகிறோம். எந்த சந்தோஷ வைபவத்திற்கும் செலவு செய்ய ஆரம்பிக்கு முன் கடவுளுக்கென்று ஒரு சிறு தொகை அர்ப்பணம் செய்தால் - அந்த சிறு தொகை அனாதை, ஆதரவற்றவர்களின் கண்ணீரை துடைக்க உபயோகபட்டால் - நமது சந்தோஷ வைபவம் கடவுள் கிருபையால் சிறப்பாக நடக்கும் என்பது நமது பெரியோர்களின் முடிவான அபிப்ராயம். அது பற்றி யாவர்க்கும் சந்தேகம் இருக்க முடியாது.

உங்களுக்கு தெரியுமா? நடமாடும் உலகத் தாயான அன்னை தெரசா அவர்களை பின் பற்றி சென்னையில் மகத்தான தொண்டு புரியும் "உதவும் கரங்கள்", ஸ்தாபனம், ஜாதி மத தேச பேதம் இல்லாமல் வயதான அனாதையான, தேக மன நலமற்ற பெரியோர்கள், கைம்பெண்கள், கணவனால் கைவிடப்பட்ட பெண்கள், அனாதை சிறுமியர்கள் ஏற்று அன்பை பொழிகிறது. எல்லாவற்றிற்கும் சிகரமாக உறவினர்களாலும், சமூகத்தாலும், ஏன், அரசாங்கத்தாலும் கைவிடப்பட்டு, ஆஸ்பத்திரி வராந்தாவிலும், குப்பை மேடுகள் பக்கத்திலும் கவனிப்பாரற்று மரணத்துடன் போராடும் அனாதை, யாவரே ஆயினும் அவர்களை ஏற்று அவர்கள் குணம் அடைய பாடுபடுகிறார்கள். அவர்களது மரணம் நிச்சயம் என தெரிந்தால், அவர்கள் உயிர் பிரியுமுன்பே அவர்களுக்கு சுய ஞாபகம் இருக்கும் பொழுதே, அவர்கள் வேண்டிக் கொண்ட பிரகாரமே மரணமான பின் கிரியைகள் நடக்கின்றன. இம் மகத்தான பணி இரவு பகல் 24 மணி நேரமும் நடக்கிறது.

இம்மாபெரும் தொண்டுக்கு தனி நபரோ, தனியார் ஸ்தாபனமோ, அரசாங்கமோ ஆதரவு கிடையாது. ஆகவே உதவும் கரங்களுக்கு அன்புக்கரம் நீட்டும் நாம் தான் மறைமுகமாக துன்பமுற்றோர் கண்களை துடைக்கிறோம். ஆக நமது சந்தோஷ வைபவங்களுக்கு செலவு ஆரம்பிக்கும் முன்பு குறைந்தது ரூ.5/- அதிகம் SKY HIGH எவ்வளவு அதிகமாகவும் - உதவும் கரங்கள் ஸ்தாபனத்துக்கு அனுப்ப அர்ப்பணிக்க வணங்கி இருகரம், கூப்பி கேட்டுக்கொள்கிறேன். முடிந்தவர்கள் வருஷத்தில் ஒரு நாள் சம்பளமாவது அனுப்பலாம். ஒரு வேளை உணவிற்கு ஆகும் செலவினையாவது ஏற்றுக் கொள்ளலாம். பல துளி, பெரு வெள்ளம், நல்ல மனமுடையோர் கருணை உள்ளத்தால் பெரு வெள்ளம் "பெரும் சமுத்திரமாக" ஆகிவிடும்.

நான் உங்களைப் போன்ற பங்களூரில் வாசம் செய்யும் ஒருவன் தான். நான் வங்கி அதிகாரியாக இருந்து ஓய்வு பெற்றவன். உதவும் கரங்களின் உன்னதமான சேவையை பத்திரிகை வாயிலாகவும் நேரிலும் கண்டு மனம் நெகிழ்ந்து இந்த விண்ணப்பத்தை தமிழ் மக்கள் முன்பு வைக்கிறேன்.

இந்த சிறு விளம்பரம் வெளிக்கொணர்ந்து இதன் மூலம் உதவும் கரங்களை பலப்படுத்த முடியும் என்று மனப்பூர்வமாய் நம்புகிறேன். இதில் ஆழ்ந்த மன சந்துஷ்டியை அடைகிறேன்.

நல்லவர்களை இனம் கண்டு நான்கு பேருக்கு அறிவித்தல் நல்ல செயல் என்று எண்ணுகிறேன். என் தாழ்மையான விண்ணப்பம் ஏற்று தமிழுலகம் எளியோர் கண்ணீரைத் துடைக்கட்டும்.

**உதவும் கரங்கள் முகவரி :**

**எஸ். வித்யாகர்,**
**உதவும் கரங்கள்,**
**460, என்.எஸ்.கே. நகர்**
**சென்னை - 600 106.**

**போன் எண் : 426141.**

**என்றென்றும் அன்புடன்,**

**G. கிருஷ்ணமூர்த்தி**

# தடையின்றி வளர்ந்துவரும் தடுப்பூசித் தயாரிப்பு

**வெ**றி நாய் கடித்தால் உடனே தடுப்பூசி போட்டுக் கொள்ள வேண்டும் என்கிற எச்சரிக்கை விளம்பரத்தைப் பலமுறை பார்த்தும் கேட்டும் இருக்கிறோம். ஆனால் அந்தத் தடுப்பூசி மருந்து எப்படித் தயாராகிறது தெரியுமா? அதனைத் தயாரித்துத் தமிழ்நாட்டின் எல்லா அரசாங்க மருத்துவமனைகளுக்கும், ஆரம்ப சுகாதார நிலையங்களுக்கும் விநியோகிக்கும் கிங் இன்ஸ்டிடியூட் ஆஃப் பிரிவெண்டிவ் மெடிசனைச் சேர்ந்த டாக்டர் அருணா பழநியப்பன் விளக்கினார்:

''நாய்க்கடியால் உண்டாகும் ரேபீஸ் என்ற நோயின் நுண்கிருமிகள் மிகவும் வீரியமானவை. 'street virus' என்ற அதி வீரிய நிலையில் உள்ள அவற்றில் ஒரு சிலவற்றை மட்டுமே எடுத்து முயலின் மூளைக்குள் செலுத்துவோம். முயல் ரேபீஸ் நோயால் பாதிக்கப்பட்டதும் அதன் உயிரை மனித குலத்துக்காகத் தியாகம் செய்து, அதன் தண்டு வடத்தைத் தனியே எடுத்து விடுவோம். ரேபீஸ் கிருமிகள் நரம்பு மண்டலத்தினைத் தாக்கும் என்பதால், முயலின் தண்டுவடத்தில் அக்கிருமிகள் இருக்கும். அவற்றை மீண்டும் விஞ்ஞான முறையில் தனிமைப்படுத்தி வேறொரு முயலின் மூளையில் செலுத்துவோம். இதே முறையில் மீண்டும் மீண்டும் செய்தால் வீரியம் குறைந்த நிலையில் ரேபீஸ் கிருமிகள் கிடைக்கும். இவற்றைத் தனிமைப்படுத்தி, (FIXED RABIES VIRUS) ஆட்டுக்குட்டிகளின் மூளையில் செலுத்தி, தடுப்பூசி மருந்தாக மாற்றிவிடுவோம். இந்த மருந்தை நாய்க் கடிபட்ட மனித உடலில் செலுத்தினால் ரேபீஸ் கிருமிகளை எதிர்க்கும் anti bodies உடலில் சுரந்து, நோய் வருவதைத் தடுக்கும்.''

— இவ்வாறு கூறிய டாக்டர் அருணா பழநியப்பன், வெறி நாய்க்கடிக்கு மட்டுமின்றி, சாதாரண நாய் கடித்தாலும் அந்நாய் சில நாட்களில் வெறி நாயாக மாறவில்லை என்று தெரிந்து கொள்ள முடியாத சூழ்நிலையில், தடுப்பூசி போட வேண்டியதன் அவசியத்தை மிகவும் வலியுறுத்தினார். எந்த நாய் கடித்தாலும் ஒருவர் மேற்கொள்ளும் முதலுதவி – மிக முக்கியம் என்பதையும் விளக்கினார்.

''வெறி நாய்க் கடியால் உண்டாகக் கூடிய Hydrophobia என்ற வியாதி வந்துவிட்டால் அதற்குச் சிகிச்சையே கிடையாது. கடிபட்ட 24 மணி நேரத்துக்குள் தடுப்பூசி போடுவதால் மட்டுமே உயிரைக் காப்பாற்ற முடியும்...'' என்றார்.

**பா**ம்புக் கடிக்கான விஷ முறிவு மருந்தையும் கிங் நிலையம் தயாரிக்கிறது. இந்த மருந்தின் தயாரிப்பின் போது, மனிதன் வாழ உயிரைக் கொடுப்பவை குதிரைகள்! நம் நாட்டில் அதிக அளவில் காணப்படும் நான்கு வகை விஷப் பாம்புகளிடமிருந்தும் செயற்கை முறையில் விஷத்தை எடுத்து, மிக மிகக் குறைந்த அளவில் குதிரையின் உடலில் செலுத்துவார்கள். குதிரையின் உடலில்

* ரத்த தானம் செய்யும் குதிரை.



போதுமான விகிதத்தில் விஷம் ஏற்றப்பட்டதும் அதன் இரத்தம் கொஞ்சம் கொஞ்சமாக, குறிப்பிட்ட கால இடைவெளிகளில் வெளியேற்றப்படுகிறது. விஷத்தன்மை உள்ள ரத்தத்திலிருந்து, அதி நவீன தொழில் நுட்ப முறையில் விஷ முறிவு மருந்து தயாரிக்கப்படுகிறது.

முன்னெல்லாம் இந்த மருந்து திரவ வடிவத்தில் இருந்தது. அதன் ஆயுட்காலம் சுமார் ஓராண்டுதான். இப்போது அதி நவீன முறையில் தயாராகும் உலர் வடிவ மருந்தை ஐந்து ஆண்டுகள் வரை குளிர்ப்பதனப் பெட்டியில் வைத்திருக்கலாம். கிராமப்புற, விவசாய மக்களுக்கு இந்த மருந்து மிகவும் உதவிகரமாக உள்ளது.



• பாம்புகளுக்கு மருத்துவம்

**கி**ங் நிலையத்தைச் சுற்றி வந்த போது, நவீன விஞ்ஞான வளர்ச்சியும் மருத்துவத் தொழில்நுட்பமும் ஆராய்ச்சியும் எவ்வளவு தூரத்துக்கு மனித உயிர் காக்கப் பயன்படுகின்றன என்று தெரிந்தது. அதே சமயத்தில் நமக்காக உயிர்த் தியாகம் செய்யும் விலங்குகளை எண்ணிய போது மிகவும் வேதனையாகவே இருந்தது.

''விலங்குகளை இவ்வளவு கொடுமைப் படுத்துவது நியாயமா?'' என்று கிங் நிலைய இயக்குனர் டாக்டர் சாரதா சண்முகசுந்தரத்திடம் கேட்டோம்.

''நம் நாட்டில் தெரு நாய்களை, அப்புறப்படுத்த முடியவில்லை; அப்படியிருக்கையில், நோய் வந்த பிறகு சிகிச்சையே கிடையாது என்கிற நிலைமையில் நாய்க் கடிக்குத் தடுப்பு மருந்து தயாரிப்பது அத்தியாவசியமல்லவா? வெறி நாய்க்கடியின் விளைவாக ஒரு மனிதனுக்கு ஏற்படக் கூடிய சோகமான முடிவை எண்ணிப் பாருங்கள். அதேபோல் வயல்வெளியில் வேலை பார்க்கும் விவசாயியும் பாம்புக்கடியால் இறந்து விடாமல் பாதுகாக்க வேண்டியது மருத்துவ உலகின் பொறுப்பல்லவா?'' என்று கேட்ட டாக்டர் சாரதா சண்முகசுந்தரம் தொடர்ந்து கூறினார்:

''1899 இல் இந்த கிங் இன்ஸ்டிடியூட் ஆங்கிலேயர்களால் ஆரம்பிக்கப்பட்ட போது வெறும்சுகாதாரப் பணிகள் மட்டுமே செய்து வந்தது. காலரா, டைபாய்ட், பெரியம்மை போன்ற நோய்கள் பரவாமல் தடுப்பது, தடுப்பூசிகள் வரவழைத்து, பாதுகாத்து, தக்க சமயத்தில் விநியோகிப்பது போன்றவைதான் செய்யப்பட்டு வந்தன. மெள்ள மெள்ள, தொற்று நோய்க் கிருமிகள் பற்றிய ஆராய்ச்சி, தடுப்பூசி தயாரிப்பு முறைகள் போன்ற விஷயங்களிலும் கவனம் செலுத்தி வளர ஆரம்பித்தது இந்நிலையம். நம் நாட்டிலிருந்து பெரியம்மை நோயை அடியோடு ஒழிக்க உதவிய நான்கு மருத்துவ ஆராய்ச்சி மையங்களுள் ஒன்று கிங்- நிலையம். இதனால் உலக சுகாதார அமைப்பின் (WHO) அங்கீகாரமும் நிதியுதவியும் நிலையத்தின் பல விஸ்தரிப்புத் திட்டங்களுக்குக் கிடைத்துள்ளன.

''கைக் குழந்தைகளுக்குப் போடப்படும் DPT தடுப்பூசி மருந்து தயாரிப்பில் இப்போது தீவிரமாகக் கவனம் செலுத்துகிறோம். மிகவும் கவனமாக, பாதுகாப்பான முறையில் தயாரிப்பதோடு, தடுப்பூசி மருந்துகளைச் சுத்தமான பாட்டில்களில் அடைத்து விற்பனைக்கோ, அரசாங்க மருத்துவ மனைகள், சுகாதார நிலையங்களில் விநியோகத்துக்கோ தயாராக்குகிறோம். தயாரிப்பின் போதும், முடிவிலும் நாங்களே கடுமையான தரக்கட்டுப்பாட்டுச் சோதனைகள் செய்கிறோம். தவிர, அரசாங்கத்தின் தரக்கட்டுப்பாட்டு சோதனைக் கூடமும் இத் தயாரிப்புகளைச் சோதனையிட்டு 'ஓ.கே.' செய்கிறது.

''கடுமையான தரக்கட்டுப்பாடும், எச்சரிக்கையும் இந்தத் துறையில் மிக அவசியம். ஒரு சிறு தவறு நேர்ந்தால் கூடப் பல்லாயிரம் மக்கள் பாதிக்கப்படுவார்கள் அல்லவா! அதனால் எப்போதும் எல்லாவற்றிலும் எங்கள் ஊழியர்கள் விழிப்புணர்வுடனும் உண்மையான ஈடுபாட்டுடனும் இருக்க வேண்டும்.... மேலும், ஒரு பெரிய தொழில் நிறுவனத்தை நிர்வகிப்பது போல், இயந்திரங்களைப் பராமரித்து மனித வளத்தையும் நிதியையும் நிர்வகிப்பதோடு, எலிக் குட்டிகள் முதல் குதிரைகள் வரை பலவித விலங்குகளையும் பராமரித்துப் பாதுகாக்க வேண்டும். உதாரணமாக, விஷ முறிவு மருந்து தயாரிக்க நாங்கள் வளர்க்கும் பாம்புகள், வனத்துறையால் 'பாதுகாக்கப்பட்ட இனங்களாக' அறிவிக்கப்பட்டவை. எனவே நாங்கள் வனத்துறையினர் விதிக்கும் முறைகள்படி அவற்றை இயற்கைச் சூழலில் பாதுகாத்து, அன்போடு கவனித்துக் கொள்கிறோம். இவையெல்லாம் திருப்திகரமாக நடைபெற்று வருவதால் இந்த நிலையத்துக்குத் தமிழக அரசு தன்னாட்சி உரிமை (autonomy) வழங்கியிருக்கிறது. கடந்த ஜூலையில் வழங்கப்பட்ட இந்த உரிமை விரைவிலேயே முழு அளவில் அமுலாகிவிடும்.''

கட்டுரை, பேட்டி: **சீதா ரவி** •

படங்கள்: **யோகா**


• டாக்டர் எம். ராமகிருஷ்ண

# சேவை நோக்கோடு ஒரு குழந்தைகள் மருத்துவமனை


• கிருஷ்ண சிதா


• வி. ரி. அப்புக்

• குழந்தைகளுக்கு நவீனச் சிகிச்சை...

“குழந்தையைத் தூக்கி வெயிலில் போடு.” என்று கிராமங்களில் சொல்வார்கள்.

சில குழந்தைகள் பிறக்கும் போதே லேசான மஞ்சள் காமாலைப் பாதிப்புடன் இருக்கக்கூடும். புற ஊதாக் கதிர்கள் அந்தப் பாதிப்பைப் போக்கிவிடக் கூடியவை. எனவே, சூரியனிலிருந்து வரும் புற ஊதாக் கதிர்களைக் குழந்தை பெற வேண்டும் என்பதற்காகத்தான் அவர்கள் அப்படிச் சொல்வது வழக்கமாக இருக்க வேண்டும். என்றாலும். இது ஒரு அனுபவ மொழியாகத்தான் இருக்க முடியுமே தவிர, விஞ்ஞான பூர்வமாக அறிந்துணர்ந்து சொல்லப் பட்டதாக இருக்க முடியாது.

சரி. இந்தப் பாதிப்புக்கு விஞ்ஞானம் என்ன செய்கிறது?

தொட்டிலில் படுத்திருக்கும் குழந்தைக்கு நேர்மேலே, இரு வரிசையில் விளக்குகள். அவை புற ஊதாக் கதிர்களைக் குழந்தைக்கு நேரடியாக அளிக்கின்றன. அது மட்டுமல்ல. குழந்தை சற்றுக் குளிராக உணரும் போது.

அவை தாமே ஒளியை அதிகப்படுத்தி வெப்பத்தைக் கூட்டுகின்றன. குழந்தை சற்று வெப்பமாக உணர்ந்தால் அவை தாமே ஒளியின் தீவிரத்தைக் குறைத்துவிடுகின்றன.

இது போன்ற மிக நவீன விஞ்ஞான சாதனங்களுடன் சென்னை — நுங்கம்பாக்கத்தில் இயங்கிவரும் சைல்ட்ஸ் டிரஸ்ட் மருத்துவமனை, ஆரம்பத்தில் ஒரு சிறிய வாடகை வீட்டில், நான்கே படுக்கைகள் கொண்ட சிறு கிளினிக்காகத்தான் இயங்கத் தொடங்கியது.

''1979 ஆம் ஆண்டு சர்வதேசக் குழந்தைகள் ஆண்டாக அறிவிக்கப்பட்டதே அப்போதுதான்'' இந்த மருத்துவ மனைக்கு வித்திடப்பட்டது. என்கிறார் டாக்டர் எம். எஸ். ராமகிருஷ்ணன் — இந்த மருத்துவ மனையின் மானேஜிங் டிரஸ்டி.

அரசு குழந்தைகள் மருத்துவ மனையில் பணியாற்றியவர். எத்தனையோ மிகச் சிறந்த மருத்துவச் சாதனங்கள் அங்கே உள்ளன. என்றாலும் சமாளிக்க முடியாத அளவுக்குக் கூட்டம். இதே போன்று சகல வசதிகளும் நிறைந்த, குழந்தைகளுக்கென்றே பிரத்யேகமான இன்னொரு மருத்துவ மனையைத் தொடங்க வேண்டும் என்கிற எண்ணம் ஜனித்தது அப்போதுதான்.

கட்டடக்கலை நிபுணர் கிருஷ்ண சிதாலே இதற்கு உந்து விசையாக இயங்க, பொது நல நோக்கோடு இன்னும் சிலரும் உதவ முன்வர, சிறிய அளவில், லாயிட்ஸ் ரோடில் அமைந்திருந்த ஒரு சிறிய வீட்டில் எளிய முறையில் தொடங்கப்பட்டது.

பெரும்பாலும் நடுத்தர வர்க்கத்தினரே வசிக்கும் பகுதி அது. அவர்கள் மத்தியில் விரைவிலேயே பிராபல்யம் பெற்றுவிட்டது இந்த கிளினிக். சிறிய அளவிலேயே தொடங்கப்பட்டிருந்தாலும், அப்போதே சுமார் நாற்பது சதவிகிதத்தினருக்கு இலவசச் சிகிச்சை அளித்து வந்தார்கள். சுமார் ஓராண்டு இப்படி.

''அப்போதுதான் ஓர் அம்மையார் தமக்குச் சொந்தமாக இருந்த நிலத்தை நன்கொடையாக அளிக்க முன் வந்தார். இப்போது நீங்கள் பார்க்கும் இந்த ஏழு மாடிக் கட்டடம் அதில் எழுப்பப்பட்டது தான்'' என்கிறார் கிருஷ்ண சிதாலே.

திருமதி அன்னபூரணி அம்மாள் ஓய்வு பெற்ற பள்ளி ஆசிரியை. அவருக்குச் சொந்தமான ஒன்றரை ஏக்கர் நிலம் நன்கொடையாகக் கிடைத்தது ஒரு வரப்பிரசாதம்தான். என்றாலும், விஸ்தாரமாகக் கட்டி முடித்து, மிக நவீனமான மருத்துவச் சாதனங்களை நிரப்புவதற்கு நிதி வசதி வேண்டுமே!

''ரோட்டரி சங்கங்கள் எங்களுக்கு உதவ முன்வந்தன. அதுவும் கனடா நாட்டு ரோட்டரி சங்கங்கள் செய்துள்ள உதவியை மறக்கவே முடியாது'' என்கிறார் ஆடிட்டர் என்.ஆர். ராஜகோபாலன். இந்த டிரஸ்டின் நிதி விவகாரங்களை அவர்தான் கவனித்து வருகிறார்.

கனடா நாட்டு ரோட்டரி சங்க கவர்னர் டாக்டர் கென் ஹாப்ஸ் சென்னைக்கு வந்திருந்த போது, ஒரு சிறு வாடகை வீட்டில் இயங்கும் இம் மருத்துவ மனையைக் கண்டார். இவர்களுடைய நோக்கங்களையும் தேவைகளையும் தெரிந்து கொண்டார். கனடா திரும்பியதும் அங்கேயுள்ள ரோட்டரி சங்கங்களில் எல்லாம் உரையாற்றினார். அப்புறம் என்ன? நிதியுதவிகள் குவியத் தொடங்கின. நம்மூரில் உள்ள நல்லிதயம் படைத்த பலரும் தங்கள் பங்குக்கு உதவ முன் வந்தார்கள். நவீன மருத்துவ வசதிகள் கொண்ட இந்தப் பல மாடிக் கட்டடம் கட்டி முடிக்கப்பட்டு விட்டது.

சுமார் 6500 சதுர மீட்டர் பரப்பளவில் அமைந்துள்ள இம்மருத்துவமனை இருபத்து நாலு மணி நேரமும் இயங்குகிறது. இருநூறு படுக்கைகள். சுமார் பதினாறு டாக்டர்கள் இங்கேயே இருந்து பணியாற்றுகிறார்கள். தவிர, ஸ்பெஷலிஸ்ட்டுகளும் குறிப்பிட்ட நாட்களில் வந்து போகிறார்கள்.

''அது மட்டுமல்ல. புறநகர்ப் பகுதிகளிலும் மூன்று கிளினிக்குகள் நடத்துகிறோம். மணலி, வண்டலூர் ஆகிய இடங்களிலும் டவுனில் நாராயண முதலித் தெருவிலும் நடைபெறும் இந்தக் கிளினிக்குகளில் மருத்துவமும் மருந்துகளும் இலவசம்'' என்கிறார் இதன் டெபுடி டைரக்டர் டாக்டர் வி.ஜி. அப்புக்குட்டி.

குழந்தைகள் நலம் காக்கும் பணியில் தொண்டு மனப்பான்மையுடன் பணியாற்றும் இந்நிறுவனத்தில், குறிப்பிட்டுச் சொல்லக் கூடிய மருத்துவ வசதிகள் எவை? டாக்டர் எம்.எஸ். ராமகிருஷ்ணன் பதிலளிக்கிறார்:

''எந்த வசதியையுமே விட்டுவைக்கவில்லை. என்றாலும் நீங்கள் கேட்பதால் சிலவற்றை மட்டும் குறிப்பிடுகிறேன். குழந்தை மருத்துவத்தில் நரம்பியல், இருதயக் கோளாறு, பிளாஸ்டிக் அறுவை சிகிச்சை, மற்றும் சிறுநீரகக் கோளாறுகள் முதலிய துறைகளில் தேர்ச்சி பெற்று வல்லுனர்களாக விளங்குபவர்களின் சேவை இங்கே கிடைக்கிறது.

''குறித்த காலத்துக்கு முன்பே பிறந்து விடும் குழந்தைகளுக்குச் சமயங்களில் தீவிர மருத்துவ சிகிச்சை அளிக்க வேண்டியிருக்கும். அதற்கான வசதிகளோடு பிரத்தியேக அறுவைச் சிகிச்சைப் பிரிவும் இயங்குகிறது.

''முதுகுத் தண்டு நோயினால் பாதிக்கப்பட்டு, ஒருபுறம் வளைந்தோ அல்லது முன்னோக்கி வளைந்தோ இருக்கும் குழந்தைகளை நீங்கள் பார்த்திருப்பீர்கள். அதற்கான அறுவைச் சிகிச்சை வசதியோடு, விசேஷப் பயிற்சி நிலையமும் உள்ளது.

''மேலும், பிறவியிலேயே ஏற்படக்கூடிய கோளாறுகளைத் தவிர்க்க, முன்னதாகவே மருத்துவ ஆலோசனைகளையும் அளிக்கிறோம்.....

பட்டியல் வளருகிறது. இவர்களது சேவையும் வளரட்டும்.

— சி. ஆர். கே.

ஏதுக்கும் நல்லாச் சரியா பாத்துடுங்க..
சந்திர சேகரைய இடைக்கால பிரதமரா நீடிக்க
விட்டுடலாமா... வேற யாருக்காவது ஆட்சி அமைக்க
சான்ஸ் கீன்ஸ் கொடுக்கணுமா...?
தேர்தல்னு அறிவிச்சுரலாமா... இல்ல
வேற ஏதாவது பிரச்னை
வந்துருமா...
அப்பால நம்ம
பேர்லதான்
தப்பு
சொல்வாங்க
...

இவரு
வேற...
சும்மா
அது இதுன்னு
இழுத்துக்கிட்டு
...
நிறுத்தின்னு
தேர்தல்னு
சொல்லிற
வேண்டியதுதானே









கல்கி

1991 மார்ச் 17
மலர் : 49 இதழ் 33
பிரமோதூத பங்குனி 3




# ராஜீவ் நடத்திய நாடகங்கள்!

117 நாட்களுக்கு மக்களைப் பொதுத் தேர்தலை ஒத்திப் போட்டது தவிர, சந்திரசேகர் பதவிக்கு வந்ததால் நாட்டுக்கு ஒரு பயனும் இல்லை. இந்த 117 நாள் வேதனையை, நாட்டுக்கு இல்லாமல் செய்திருந்தாலே, உசிதமாக இருந்திருக்கும். ஆனால், சந்திரசேகரின் பதவி ஆசை, ராஜீவ் காந்தியின் வலையில் அவரை விழச் செய்தது. விழுந்து, கட்டுண்டு, பொம்மையாக ஆடினார். மேலும் மேலும் அவமானங்களைச் சகித்தார். 'இனியும் பொறுக்க முடியாது' என்ற நிலையில் ராஜினாமா செய்து, நாடாளுமன்றத்தைக் கலைத்து விடவும் குடியரசுத் தலைவருக்குச் சிபாரிசு பண்ணியிருக்கிறார். இந்த நாட்டின் பிரதமர்களின் பெயர்கள் பட்டியலிடப்படும் போதெல்லாம் சந்திரசேகர் பெயரும் இடம் பெற்றிருக்கும் என்பது தவிர, அவருக்கு வேறு ஒரு லாபமும் இல்லாமற் போயிற்று. வி. பி. சிங் ஆட்சியைச் சதி பண்ணிக் கவிழ்த்த அநீதி; அதர்மமான முறையில் பதவிக்கு வந்த அநீதி — ஆகிய இரு அநீதிகளுக்கும் சந்திரசேகரின் ஆட்சிக் காலமே அவருக்குத் தண்டனையாக அமைந்தது! பாவம், அவ்வளவு அவமானப்பட்டு விட்டார்.

ராஜீவ் நடத்திய திட்டமிட்ட நாடகங்கள், அவருடைய அருமை நண்பர் அமிதாப் பச்சனைக் கூட வியப்பில் ஆழ்த்தியிருக்கும். டி. வி. யில் பாருங்கள், 'இந்தப் பூனையும் பாலைக் குடிக்குமா?' என்பது போல் காட்சி தருவார்; ஒரு பாவமும் அறியாதவர் போல் பேசுவார். ஆனால் செய்த காரியங்கள் அத்தனையும் சர்வாதிகாரத்தனமானவை!

காங்கிரஸுக்குள்ளேயே, ஆந்திராவிலும், கர்நாடகத்திலும், மகாராஷ்டிரத்திலும் அவர் நடத்தி வைத்த நாடகங்கள் ஒருபுறம் இருக்கட்டும்; அதற்கு வெளியேயும் எத்தனை மாய்மாலங்கள், ஜகஜ்ஜாலங்கள்! தி. மு. க. ஆட்சியைக் கவிழ்த்தது என்ன! மத்திய பட்ஜெட் சமர்ப்பிக்கப்பட்டால், புது வரிகள் தேர்தலில் தனக்குப் பாதகமாகிப் போகும் என்பதால் அதற்குத் தடை விதித்தது என்ன! இடைக்கால பட்ஜெட் தயாரிப்பிலும் பிரணாப் முகர்ஜியை அனுப்பி மேற்பார்வையிடச் சொன்னது என்ன! அமெரிக்க விமானங்களுக்குப் பெட்ரோல் நிரப்பக் கூடாது என்று ஆர்ப்பாட்டம் பண்ணியது என்ன! இவர்தாம் ஏதோ அயல் விவகார மந்திரி போல் மாஸ்கோவுக்கும் டெஹ்ரானுக்கும் தன்னிச்சையாகப் பறந்தது என்ன! 'இந்தியா அணுகுண்டு தயாரிக்கும்' என்று அறிவித்தது என்ன! அடேயப்பா! தாம்தான் பிரதமர்; தம் இஷ்டப்படிதான் எல்லாமே நடக்கின்றன என்பதைத் தெளிவாகவே புரிய வைத்தார். வெளியேயிருந்து ஆதரவு, குறைந்தபட்சம் ஓராண்டு ஆதரவு, கொள்கை அடிப்படையில் ஆதரவு, நிபந்தனையுடன் கூடிய ஆதரவு என்று படிப்படியாகத் தேய்ந்து, கடைசியில் பிரதமர் நாடாளுமன்றத்தில் பேசும் போது, ''கோரம்'' கூட இல்லாமல் போயிற்று! — அதாவது அவையை நடத்தத் தேவையான குறைந்தபட்ச அங்கத்தினர்கள் கூட இல்லை! ராஜீவின் ஆதரவு, 'கையைக் குலுக்கிய படியே மென்னியை முறிக்கும் ஆதரவு' என்பதை ஒருவாறு புரிந்து கொண்ட சந்திரசேகர், 'தப்பினோம் பிழைத்தோம்' என்று ராஜினாமாவைச் சமர்ப்பித்து விட்டார்!

தமது வீட்டை ஹரியானா மாநில ஸி. ஐ. டி.கள் வேவு பார்த்தார்கள்; இந்தக் குற்றத்துக்காக அம்மாநில அரசை டிஸ்மிஸ் செய்ய வேண்டும் என்பதே ராஜீவ் நடத்திய நாடகத்தின் கடைசிக் காட்சி. இதைச் செய்யாத வரை நாடாளுமன்றத்தைப் பகிஷ்கரிக்கப் போவதாக அவர் கூறிவிட்டார். இடைக்கால பட்ஜெட் சமர்ப்பிக்கப்பட்டிருக்கும் சமயத்தில், அது நிறைவேற்றி வைக்கப்பட வேண்டிய தருணத்தில், அவர் இப்படி நடந்து கொண்டது அற்பத்தனமானது. 'நான் ஆதரவை வாபஸ் பெறவில்லை; நடவடிக்கை தான் கோருகிறேன்' என்று ராஜீவ் சொன்னது, 'கொலை செய்யவா போகிறேன்? தற்கொலையைத்தானே கோருகிறேன்?' என்பதாகச் சந்திரசேகர் காதில் ஒலித்திருந்தால் மிகையாகாது. தேவிலாலைத் துணைப் பிரதமராகக் கொண்டிருப்பவர், ஹரியானா அரசை டிஸ்மிஸ் செய்துவிட்டு எத்தனை மணி நேரம் பதவியில் நீடிக்க முடியும்? அநீதியான முறையில் தி. மு. க. அரசைக் கலைக்கத் துணிந்த சந்திரசேகரால் கூட ராஜீவின் அபத்தமான இந்தக் கட்டளையை நிறைவேற்றி வைக்க முடியவில்லை. அவருக்கே போதும் போதும் என்றாகி விட்டது.

'பழுத்த அனுபவசாலியான சந்திரசேகர், ராஜீவ் காந்தி இப்படித்தான் நடந்து கொள்வார் என்பதை ஏன் ஆரம்பத்திலேயே கணிக்காமல் போனார்?' என்பதுதான் ராஜீவ் நடத்திய இந்த நாடகங்களில் ஒரே மர்ம முடிச்சு! 'பதவி ஆசை அவர் கண்களை மறைத்தது' என்பதே பதில்!

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# ஒருமைப்பாட்டுக்கு ஓர் இடம்

**கல்லூரி மாணவர்**

**கட்டுரைப் போட்டி!**

**ரூ. 50 பரிசு**

**பெறும் கட்டுரை**




**ப**ணப்பிரச்னை இல்லை; எங்கு வேண்டுமானாலும் செல்லலாம் என்று, ஒரு சந்தர்ப்பம் கிடைத்தால், நான் மீண்டும் செல்ல விரும்பும் இடம் முக்கடலும் முத்த மிட்டுத் தாலாட்டும் கன்னியாகுமரிதான். கடலில் அலைகள் தாலாட்டுப்பாட, கரையில் நாம் நின்று ரசிக்க, கால்களை அலைகள் முத்தமிட்டு வருடிச் செல்ல, ஆஹா, என்ன சுகம்! மனத்திற்கு எத்தனை மகிழ்ச்சி! அதை விட்டு வரவே மனம் வருவ தில்லை. விடியற் காலையில், வைகறைப் பொழுதில் மென்மையான இருட்டில், கடலின் விளிம்பில் சூரியன் செம்மைப் பந்தாகக் கிளம்பி, மெல்ல மெல்லத் தன் பொற்கிரணங்களைப் பரப்பும் அழகை வேறு எங்கே காண முடியும். மாலையிலும் சூரியன் அப்படியே மெல்ல மெல்லக் கடலுக்குள் அஸ்தமனமாகும் காட்சியையும் மறக்க முடியுமா? பௌர்ணமி அன்று, சூரிய அஸ்தமனமும், சந்திரனின் உதயமும் ஒரே சமயத்தில் நிகழும் அற்புதமான இடம்.

கன்னியாகுமரியில்தான் நம் தேசத்தின் ஒருமைப்பாட்டை ஒருங்கே காணலாம். இந்தியாவின் பல மாநிலத்தவரையும் அங்கே காணும் போது, இயற்கை அன்னையின் மடியில் நாம் அனைவரும் இந்தியர் என்ற ஓரே இனம் தான் என மனம் எண்ணு கிறது. வாழ்க்கை என்னும் கடலில் துன்பம் என்னும் அலைகள் ஓயாது அடித்தாலும் மனம் தளராது நிமிர்ந்து நிற்க வேண்டுமெனக் காட்டுவதைப் போல அலைகடலின் நடுவே கம்பீரமாகக் காட்சி தருவது விவேகானந்தர் நினைவு மண்டபம். அங்கு படகில் செல்வதே தனி உல்லாசம். அங்கு சென்றதும் அதன் கலையழகில் மனம் மயங்கி விடுகிறது. தியான மண்டபத்திற்குச் சென்று ஞானச் சுடராம் விவேகானந்தரின் திருவடியைத் தரிசிக்கும்போது மெய்சிலிர்த்துப் போகிறது. நம்மையறியாமலே கண்கள் மூடி, கைகூப்பி வணங்கி, அந்தத் தெய்விகச் சந்நிதியில் மனமுருகி விடுகிறோம். ஆன்மீகத்திற்குப் பாடுபட்ட விவேகானந்தர் நினைவு மண்டபமும், மனித நேயத்திற்குப் பாடுபட்ட மகாத்மாவின் நினைவு மண்டபமும் இருப்பது கன்னியா குமரியில் தான். இந்தியாவின் தந்தை காந்தியடிகளின் அஸ்தி கடலில் கரைக்கப் படுவதற்கு முன் பொது மக்கள் பார்வைக்கு வைக்கப்பட்டிருந்த அதே இடத்தில் தான் மகாத்மாவின் நினைவு மண்டபம் கட்டப்பட்டுள்ளது.

கன்னித் தெய்வமான கன்னியாகுமரிக்கு இங்கே அழகான ஆலயம் உள்ளது. இந்தியாவுக்கே விழிப்பு மிக்க காவல் தெய்வமாகக் கருதப்படுகிறாள். இங்கே சிவனை மணம் புரிய வேண்டித் தவம் இருப்பதாக ஐதீகம். கொள்ளை அழகும், குமிழ்ச்சிரிப்பும் அருள் பார்வையும் காணக்கண் கோடி வேண்டும். சித்திரா பௌர்ணமி அன்று அன்னைக்குக் கூடை கூடையாக மலர் அபிஷேகம். பலவித மலர்களால் அபிஷேகம் செய்து ஆராதனை செய்வது கண் கொள்ளாக்காட்சி. அன்னையின் அருளும், மலர்களின் மணமும் நம்மை பக்திப்பரவசத்தில் திக்கு முக்காடச் செய்கின்றன.

மாணவர்கள், மனித நேயத்திற்குப் பாடுபட்ட மகாத்மாவைப் போல இருக்க வேண்டு



மெனக் காந்தி நினைவு மண்டபமும், வாழ்க்கையில் கடவுள் நம்பிக்கையுடனும் நற்சிந்தனையுடனும் நற்செயல்களைச் செய்ய வேண்டுமென விவேகானந்தர் நினைவு மண்டபமும் வலியுறுத்துகின்றன என்றால், வாழ்க்கையில் ஒவ்வொருவரும் ஓர் உயர்ந்த லட்சியத்தைக் கொள்கையாகக் கொண்டு; வாழ்க்கையில் உயர்ந்து நிற்க வேண்டுமெனக் காட்டுவது போல, உயர்ந்து நிற்கிறது கலங்கரை விளக்கம். அதில் ஏறிப் பார்ப்பது தனி ஆனந்தம் தான். அதன் உச்சியில் நின்று கொண்டு முக்கடலின் சங்கமத்தைப் பார்க்கும் போது, எவ்வளவு ஆனந்தமாக இருக்கிறது! இயற்கையின் அழகையும், வாழ்க்கையின் தத்துவத்தையும் ஒரு சேர உணர்த்துவதல்லவா கன்னியாகுமரி!

— வ. செந்தில்குமார்,
இரண்டாம் ஆண்டு,
மதுரை மருத்துவக் கல்லூரி,
மதுரை.



## மயங்க வைக்கும் மலைராணி!

கொளுத்தும் கோடை வெய்யிலுக்குப் பெயர் போன தமிழ் நாட்டில், கதிரவனின் கடுமையிலிருந்து தப்ப ஊட்டிதான் சரியான இடம். அளவான குளிர், மிதமான வெப்ப நிலை, வானத்தை முட்டும் மரங்கள், படிக்கட்டுகளிலே கொலு பொம்மைகள் வைத்திருப்பது போன்று மலைச்சரிவில் வீடுகள், எல்லா இடத்திற்கும் மேடேறிப் போக வேண்டியதால் உடலுக்கு நல்ல பயிற்சி, இதுகாறும் படித்து அலுப்புற்றிருக்கும் மனத்திற்கு இயற்கையின் ஆறுதல்.

இயற்கையன்னை நீலப்பட்டுடுத்தி, பச்சை நிறப் போர்வையுடன் படுத்திருப்பது போன்ற நேர்த்தி, மனத்தில் ஏற்படுத்தும் கற்பனைகளை எப்படிச் சொல்ல முடியும்? இன்னும் சற்று உயரச் சென்று உலகோரை உரக்கக் கூவி அழைக்கத்தூண்டும் தொட்ட பெட்டாச் சிகரம், ஏரிக்குச் சென்று, படகில் அமர்ந்து, துடுப்பெடுத்து நீரைக் கிழித்துப் புறப்படுகையில், தன்னையறியாத கம்பீரம் கலந்த ஆனந்தம் மனத்தில் முகிழ்க்காதோ?

சரி, நகரத்துச் சந்தடிகள், இரைச்சல்கள், இயந்திரங்களிடமிருந்து முற்றிலுமாக ஒதுங்கி, வெகு தூரம் செல்ல வேண்டுமா? அருகிலுள்ள முதுமலைக் காட்டுக்குச் சென்று யானையொன்றை அமர்த்திக் கொண்டு, பாகனுக்குப் பின்னே, யானை முதுகில் உட்கார்ந்து காட்டுக்குள்ளே விலங்குகளைப் பார்க்கச் சென்று விடலாம்.

காட்டுக்குள்ளே செல்லச் செல்ல, பயங்கரமான அமைதி என்பார்களே அதை ரசிக்கலாம். இலைகளின் மேல் இலைப் பந்தல் போட்டு பூமித் தாயின் மேல் சூரிய கிரணங்கள் பட விடாமல் இயற்கை செய்யும் வித்தையான ஜாலம்; சிற்றருவியின் சலசல வென்ற சப்தம்; ஆங்காங்கே தண்ணீர் குடிக்க வரும் மான் முதலியவை சற்று நிமிர்ந்து நம்மைப் பார்த்து விட்டு 'அட சரிதான் போய்யா' என்ற அலட்சியத்துடன் மீண்டும் தண்ணீர் குடிக்கும் பாங்கு; சில நம்மைக் கண்டு மருண்டு ஓடித் தொலைவில் சென்று பயத்துடன் நம்மைப் பார்க்கும் பாவனை, யானைக் கூட்டங்களின் குறுக்கீடு — என்னடா நம்மில் ஒருவன், யாரோ இருவரை முதுகில் ஏற்றி வந்து நம்மை அவமானப் படுத்துகிறானே என்ற நினைப்புடன் ஏளனமாக அவை நம்மை ஒதுக்கிச் செல்லும் நேர்த்தி.... இவைகள் எழுத்திலடங்கா; அனுபவித்தால் தான் புரியும்!

— டி. எஸ். கிருஷ்ணன்,
இரண்டாம் ஆண்டு, பொறியியல்
(மெக்கானிகல்),
நேஷனல் இஞ்சினியரிங் கல்லூரி,
நாலாட்டின்புத்தூர் — 627 716.

## பௌர்ணமி இரவில் தாஜ்மகாலில்...

ஒவ்வோர் இந்தியக் குடிமகனும் தன் வாழ்நாளில் ஒரு முறையாவது பார்க்க வேண்டிய நகரம் தில்லி. பம்பாய், கல்கத்தா போல நெரிசல் இல்லாதது இதன் தனிச் சிறப்பு. நன்கு திட்டமிட்டு வடிவமைக்கப் பட்டதால் சொர்க்கபுரி போன்ற பிரமையை ஏற்படுத்துகிறது. கன்னாட்சர்க்கிள், பாலிகா



பஜார் (அண்டர் கிரவுண்ட் மார்க்கெட்), செங்கோட்டை, நந்தன்லால் போஸ் மியூசியம், பொம்மை மியூசியம், ரயில் மியூசியம், விண்வெளிக் காட்சிக்கூடம், பாராளுமன்றம் என்று பார்க்க வேண்டிய இடங்களின் பட்டியல் நீளும். இந்தியா கேட் முதல் ராஷ்ட்ரபதி மாளிகை வரையுள்ள நேர்ச்சாலையின் வசீகரமே தனி என்றாலும் தில்லிப் பயணத்தின் முக்கிய அம்சம் தில்லியில் இல்லை. அங்கிருந்து பேக்கேஜ் டூராக அழைத்துச் செல்லப்படும் ஆக்ராவில்தான் இருக்கிறது.

பௌர்ணமியன்று நிலவின் ஒளிபட்டு அந்தப் பிரம்மாண்டமான பளிங்கு மாளிகை பிரகாசிக்கிறபோது, காண்பது கனவா நனவா என்ற சந்தேகம் ஏற்படுகிறது. இந்தியாவிலிருக்கும் இந்த உலக அதிசயம் ஒவ்வொருவரும் அவசியம் காண வேண்டிய ஒன்று. பணப்பிரச்னையும் வேறு தடங்கல்களும் இல்லையெனில், மீண்டுமொருமுறை டெல்லி சென்று, இந்தியா கேட்டிலிருந்து ராஷ்ட்ரபதி மாளிகை வரை நடந்து விட்டு, ஒரு பௌர்ணமி இரவு முழுவதையும் தாஜ் மஹாலில் கழிக்கவே விரும்புகிறேன்.

**— மு. செந்தில்,**
**மூன்றாம் ஆண்டு,**
**கம்ப்யூட்டர் ஸயன்ஸ்,**
**மெப்கோ பொறியியல் கல்லூரி,**
**அர்னாத்தூர் போஸ்ட்,**
**சிவகாசி — 626 005.**

## மனங்கவர்ந்த மணமேல்குடி!

புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ள மணமேல்குடிக்குத்தான் என் விடுமுறையைக் கழிக்கப் போகப் போகிறேன். அந்த ஊர் கடலுக்கு அருகில் உள்ளது. அதனால் கடலிலிருந்து வரும் காற்றின் சுகத்திற்கு ஈடேது? அதோடு அந்த ஊர் மக்கள் அனைவரிடமும் அன்பாகப் பழகக்கூடியவர்கள். அந்த ஊரிலிருந்து சுமார் மூன்று கி.மீ தொலைவில்தான் கோடிக்கரை உள்ளது. அங்கு காலைச் சூரியன் கடலிலிருந்து எழுந்து வருவது போல் தோன்றும். கோடிக்கரைக்காட்டில்வேடந்தாங்கலைப்போலவே ஏகப்பட்ட பறவைகள்! எந்த இடத்தில் தோண்டினாலும் உப்பு நீர் என்றாலும் ஆர்மசியன் ஊற்றில் மட்டும் நல்ல தண்ணீர் என்பது அதிசயத்திலும் அதிசயம். ஆர்மசியன் ஊற்றிலிருந்துதான் குழாய்கள் மூலம் ஊருக்குள் குடிநீர் சப்ளை செய்யப்படுகிறது. இப்படி ஏராள இயற்கை அழகுகள் நிறைந்திருக்கும் அவ்வூரை எப்படி மிஸ் பண்ண முடியும்?

**— தெ. க. திலீபன்,**
**பி. ஏ. முதலாம் ஆண்டு,**
**வரலாற்றுத் துறை,**
**அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.**

## காவலூர் செல்லவே விருப்பம்!

எரிபொருள் தட்டுப்பாடு மிக அதிகமாக உள்ள இந்த நிலையில் நாட்டையும் காக்க வேண்டுமென்ற பரந்த நோக்கோடு இந்த ஆண்டு நீண்ட தொலைவுப் பயணத்தை ரத்து செய்து மிக அருகிலேயே எங்கேனும் சென்றால் என்ன என்று யோசனை செய்ததில், ஒரு முக்கியமான இடத்தைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை வந்துவிட்டது. வ. ஆ. மாவட்டம் வாணியம்பாடி என்ற நகரத்திலிருந்து சுமார் முப்பது கிலோ மீட்டர் தொலைவில் அமைந்துள்ள 'காவலூர்' என்ற வானவியல் ஆராய்ச்சி நிலையம்தான் அது. ஜவ்வாது மலையில் அமைந்துள்ள அதில்தான் ஆசியாவிலேயே மிகப் பெரிய வானியல் தொலைநோக்கி உள்ளது. இந்த டெலஸ்கோப் எந்தத் திசையிலும் திரும்பக் கூடியது! இரவில் அங்கு தங்கி நட்சத்திரங்களையும் கோள்களையும் காண ஆவலாய் இருக்கிறேன்.

**— எல். மாறன்,**
**உயிர்ப் புள்ளியியல் துறை,**
**கிறிஸ்துவ மருத்துவக் கல்லூரி,**
**வேலூர் — 632 002.**
**வ. ஆ. மா.**

---



**"வளைகுடாச் சண்டைதான் முடிஞ்சுடுச்சே... இன்னும் கத்தரிக்காய் விலை இறங்கலையா?"**

**"அங்கே இன்னும் சமாதானம் கையெழுத்து ஆகலிங்களே!"**

**"கல்கிப் வார் நின்னுதுலேருந்து டீ. வி. 'டல்' லடிக்குதுடா... ஆறு வாரத்தோட நிறுத்திட்டாங்களே... மத்த சீரீஸ் மாதிரி பதிமூணு வாரம் காட்டுவாங்கன்னு நினைச்சேன்!"**





# சித்திரைப் பூக்கள்

சலசலத்துச் செல்லும் நீரோடையாகப் படம் முழுதும் இளமையின் துள்ளாட்டம்.

ஜெயந்த்குமார், வினோதினி டீன் ஏஜ் ஜோடி.

இருவருக்குமிடையேமோதலில்ஆரம்பித்துக் காதலில் முடிவு. முன்னவரிடம் நாட்டிய அசைவுகள் இயற்கை. பின்னவரிடம் பனிச், லேசான தயக்கம். (அல்லது கூச்சமா?)

இருவரையும் வைத்துப் பெரியவர்கள் நகைச்சுவைப் பந்தாட்டத்தில் ஈடுபட, அவ்வப்போது பாடியாடிக் காதல் செய்வதோடு, அந்த ஜோடிக்கு வேலை முடிந்து விடுகிறது. அதற்கு மேல் கனம் ஏற்றினால் என்னவாகும் என்பதைக் கதை — வசன — இயக்குனர் புரிந்து கொண்டிருப்பதில் புத்திசாலித்தனம் தெளிவு.

சிரிப்புமூட்டுவதில் பண்பட்டுப் போன எஸ். எஸ். சந்திரனுடன் மோதுகிறார் வினு சக்ரவர்த்தி. குளிருக்காக பஸ் ஜன்னலை மூடுவதில் தொடங்கும் மோதல் முடிவு வரை பல்வேறு உருப்பெற்று கதை நகர உதவுகிறது என்றால் —

வித்தியாச ரவுடியாக வரும் ராதா ரவி, சினிமா வில்லன் என்ன செய்வான், எப்படி நடந்து கொள்வான் என்பதை விலாவாரியாக விவரித்து, அது போலவே நடந்து கொள்ள முயன்று, அவர் பங்குக்குக் கிச்சுக் கிச்சு மூட்டுகிறார்.

பத்திரிகைகளில் படித்த் ஜோக்குகளையெல்லாம் காலம் நேரம் தெரியாமல் நினைவுக்குக் கொண்டு வந்து, அசந்தர்ப்ப வேளைகளாகத் தேடிப் பிடித்துச் சிரித்து, இக்கட்டுகளில் மாட்டிக் கொண்டு அப்பாவித்தனமாக விழிக்கும் ஜோசியர் — மாஜிக் நிபுணர் சார்லி தனி ரகம்.

நகைச்சுவை என்று முடிவு செய்த பிறகு எல்லை ஏது? போலீஸ் அதிகாரி உள்பட எல்லா(ரு)மே கேலிச்(க்குரிய) சித்திரங்களாகி விடுகின்றன.(ர்.) (முன்னாள் ராணுவக்காரர் சரத்குமார் மட்டும் இதற்கு விதிவிலக்கு.) என்றாலும், அந்த இளம் காதல் சிட்டுக்கள் காட்டாற்று வெள்ளத்தில் விழுந்து சுழலுக்கும் ஆற்றோட்ட வேகத்துக்கும் ஈடுகொடுக்க முடியாமல் தத்தளித்து அதன் வேகத்தில் அடித்துக் கொண்டு போகப்பட.... அதுவரை பொங்கிய சிரிப்பலைக்கு மாறுபட்ட கிளைமாக்ஸ்.

சிந்தனைக்கும் சீரியஸ் போக்குக்கும் இடமேயில்லாத லைட் வெயிட் கலகல. மேற்கும் கிழக்கும் பின்னிப் பிணைந்த, மிதக்க வைக்கும் இசை!

— சி. ஆர். கே.

• டாக்டருக்காகக் காத்திருக்கும் நோயாளிகள்...

# ஏழைகளுக்காகக் காத்திருக்கும் மருத்துவமனை!

"**நா**ன் ஏழை; எனது கண் ஆபரேஷனுக்கு என்னால் செலவேதும் செய்ய முடியாது!" என்று வெறும் வாய் வார்த்தையாகச் சொன்னாலே போதும். அப்படிச் சொல்பவர்களுக்கு இலவசமாகவே ஆபரேஷன் செய்து அனுப்புகிறார்கள்.

இந்த நூற்றாண்டில் இப்படியோர் அதிசயமா? அதிசயமே இல்லை. சென்னை — தியாகராய நகரிலுள்ள கே. ஜ. எம். லைன்ஸ் கண் மருத்துவமனையில் அன்றாடம் நடந்து கொண்டிருக்கும் உண்மைதான் இது.

"இலவசம் என்கிற போது, சிறிது வசதியுள்ளவர்கள் கூடத் தாங்கள் ஏழை என்று பொய் சொல்லும் வாய்ப்பிருக்கிறதே?" என்று அந்த மருத்துவமனையின் சேர்மன் வசந்தலால் மேத்தாவிடம் கேட்ட போது சிரித்தார்.

"இங்கே வருகிறவர்களில் பத்து சதவிகிதம் பேர் அப்படிச் சொல்லலாம். சொன்னால் சொல்லி விட்டுப் போகட்டுமே! ஒருவர் தமக்கான சிகிச்சைக்குக் கூடத் தம்மால் பணம் தர இயலாது என்று கூறுவதை நாம் ஏன் சந்தேகிக்க வேண்டும்? அப்படிச் சந்தேகப்படுவது கூடப் பாவம் என்றுதான் கருதுகிறேன்!"

"எல்லோருக்குமே இலவசம்தானா?"

"இங்கே எல்லாமே குறைந்த செலவுதான். எக்ஸ்—ரே என்றால் முப்பது ரூபாய். இ. ஸி. ஜி. என்றால் இருபது ரூபாய் என்றுதான் சார்ஜ் செய்கிறோம். அதைக் கொடுக்க முடிந்தவர்கள் கொடுக்கலாம். அதை விடவும் குறைந்த தொகையைத்தான் ஒருவரால் கொடுக்க முடியுமென்றால் அப்படியும் கொடுக்கலாம். ஒன்றுமே கொடுக்க வசதியில்லையென்றால் கொடுக்காமலும் இருக்கலாம். அதே போல்தான் பெட் வசதிகளுக்கும். இங்கே மூன்று பிரிவுகள். முதலாவது இலவசம்; இரண்டாவது வசதிக்கேற்ப மொத்தச் செலவில் காட்டப்படும் சலுகை; மூன்றாவது நாங்கள் செய்யும் குறைந்தபட்ச சார்ஜ் முழுமையுமாகக் கொடுப்பது!"

"இதற்கெல்லாம் ஏராளமாகப் பணம் செலவாகுமே, எப்படிச் சமாளிக்கிறீர்கள்?"

"நன்கொடைகள்தான்!"

"போதுமான அளவுக்கு நன்கொடைகள் கிடைக்கின்றனவா?"

"போதும் போதும் என்கிற அளவுக்குக் கிடைக்கின்றன. 73ல் இந்த மருத்துவ

மனையை நான் ஒரு சவாலாக ஏற்றுக் கொண்டு ஆரம்பித்த போது இரண்டே இரண்டு அறைகள்தான். இப்போது பாருங்கள்... இரண்டு மாடிக் கட்டடமாக உயர்ந்து விட்டது. முன்பு கண் சிகிச்சை மட்டும்தான் இருந்தது. இப்போது இ. என். டி., பல் வைத்தியம் என்று வெகுவாக வளர்ந்து விட்டது. இதுவரை மொத்தம் சுமார் மூன்றரை லட்சம் நோயாளிகள் வந்து மருத்துவ வசதி பெற்றுச்-சென்றிருக்கிறார்கள்.

''முன்பு 'அமர்நிதி ஆபரேஷன்ஸ்' என்று ஒரு திட்டத்தை அமல் செய்தேன். அதில் ஒருவர் ஆயிரம் ரூபாயை நன்கொடையாகக் கொடுத்து விட்டால், ஆண்டுக்கு ஒரு முறை அவர் குறிப்பிடும் ஒரு நாளில் ஒருவருக்கு இலவசமாகக் கண் ஆபரேஷன் செய்வோம். அத் திட்டத்தில் இலவசமாகக் கண் ஆபரேஷன் செய்து கொள்ள வரும் நோயாளிகளின் எண்ணிக்கையை விட, நன்கொடை கொடுப்பவர்களின் தொகை அதிகமாகும் போல் இருந்ததால் இப்போது அத் திட்டத்தையே நிறுத்தி விட்டோம்! அந்த அளவுக்கு நன்கொடையாளர்கள் இருப்பது மகிழ்ச்சியாக இருக்கிறது.

''அடுத்ததாக 90 — 94ம் ஆண்டுக்கு 'நேத்ரரக்ஷன்' என்று ஒரு திட்டத்தைச் செயல்படுத்திக் கொண்டிருக்கிறோம். அதாவது ஆண்டுக்கு இருநூறு ரூபாய் வீதம் 90 — 94 வரை மொத்தம் ஒருவர் ஆயிரம் ரூபாய் கட்டுவது. அப்படிப்பட்டவர்களுக்கு ஒரு சிறு ஷீல்டு ஒன்று கொடுப்போம். பிறகு அவர்கள் சிபாரிசு செய்து அனுப்பும் நபர்களுக்கெல்லாம் கண் ஆபரேஷன் செய்வோம். 'இவருக்கு இலவசமாகச் செய்யுங்கள்' என்று அவர்கள் குறிப்பிட்டுச் சொன்னால் இலவசமாகவே செய்வோம். அவர்கள் இத்தனை பேருக்குத்தான் சிபாரிசு செய்ய வேண்டும் என்பதில்லை. எத்தனை பேருக்குச் செய்ய முடியுமோ அத்தனை பேருக்குச் செய்யலாம்!

''அது போலவே இந்த ஜனவரியிலிருந்து 'மங்கள் ஒளஷத்' என்று ஒரு புதிய திட்டத்தை அறிமுகப்படுத்தியுள்ளோம். இதன்படி மொத்தம் 365 பேரிடம் தலா ஆயிரம் ரூபாய் நன்கொடை பெற்று வங்கியில் போட்டு விடுவது. அந்த வட்டியில் ஒவ்வொரு நாளிலும் நன்கொடை கொடுத்த ஒவ்வொருவர் பெயரால் மருந்துகள் வழங்குவது. இதற்கும் நன்கொடைகள் வந்து கொண்டேயிருக்கின்றன. உண்மையைச் சொல்லப் போனால் நன்கொடைகள் வருகிற அளவுக்கு இங்கே நோயாளிகள் வருவதில்லையே என்பதுதான் எனது கவலையெல்லாம்!'' என்கிறார் மேத்தா.

''உண்மையாகவா?'' என்று நாம் வியப்போடு கேட்டோம்.

''ஆமாம். இந்த மருத்துவமனையை வெளியிலிருந்து பார்ப்பவர்கள், 'இதெல்லாம் பணக்காரர்கள் செல்லுமிடம்; இங்கெல்லாம் கூடவா இலவசமாக மருத்துவம் பார்ப்பார்கள்!' என்று நினைத்துக் கொள்கிறார்கள். காரணம் எங்கள் மருத்துவமனையின் சுத்தம். வாருங்கள் நான் சுற்றிக் காட்டுகிறேன். எங்கேயாவது ஓர் இண்டு இடுக்கில் ஓர் ஒட்டடையைக் கண்டுபிடித்துக் காட்ட முடியுமா உங்களால்? இதையொரு சவாலாகவே சொல்கிறேன். ஒட்டடை கூட வேண்டாம் எங்கேயாவது ஒரு ஜன்னலோர விளிம்பில் உங்கள் விரலை வைத்துத் தேய்த்துப் பாருங்கள். உங்கள் விரலில் ஏதாவது புழுதி ஒட்டினால் கூட நான் தோற்றுப் போனதாக ஒப்புக் கொள்கிறேன்...'' என்று மருத்துவமனை முழுவதையும் நமக்குச் சுற்றிக் காட்டினார்.

அவர் சொன்னது முற்றிலும் உண்மை. எந்த இடத்திலும் புழுதி கூடப் படிந்திருக்கவில்லை. அத்தனை சுத்தம். ''இலவசமாகச் சிகிச்சைக்கு வந்தவர்கள்தானே என்கிற அலட்சிய மனோபாவத்துடன் இங்குள்ள யாரும் நடந்து கொள்ள மாட்டார்கள்.



• நோயாளிகளுக்காகக் காத்திருக்கும் வசந்தலால் மேத்தா!

டாக்டர்கள், நர்ஸ்கள், ஊழியர்கள் ஆகியோரின் கனிவான பேச்சிலேயே வரும் நோயாளிகளுக்குப் பாதிக் குணம் கிடைத்து விடும்'' என்றார் மேத்தா!

''எல்லாம் சரி, இப்படியோர் மருத்துவமனையை ஆரம்பிக்கும் எண்ணம் உங்களுக்கு எப்படி வந்தது?'' — கடைசியாக அவரிடம் கேட்டோம்.

''நான் சிறுவனாக இருந்த போது எனது தாயின் கண் பார்வை பழுதுபட்டது. என்னென்னவோ சிகிச்சை செய்தும் அவரது கண் பார்வையை முழுவதுமாக எங்களால் மீட்டுத் தர இயலவில்லை. வசதியான எங்களுக்கே இப்படியென்றால் வசதியற்ற ஏழைகள் என்ன செய்ய முடியும்? என்ற கேள்வி அப்போதே என்னுள் எழுந்தது. அந்தக் கேள்விக்கான விடைதான் இந்த மருத்துவமனை!'' என்றார் வசந்தலால் மேத்தா!

— இளங்கோவன்

# அப்புசாமி சதாம் உசேனைச் சந்திக்கிறார்

(சென்ற இதழ் தொடர்ச்சி)

ஸதாம் உஸைன் தன் உருவத்தை முழுவதுமாக அப்புசாமிக்குக் காட்ட விரும்பவில்லை போலும். மறைவாக நின்று கொண்டு, டார்ச் ஒளியால் அப்புசாமியின் கண்களைக் கூசச் செய்து கொண்டிருந்தார். டப்! விளக்கு அணைந்தது.

மத்தியான்ன வெய்யிலில் மாட்டினி ஷோவுக்கு வந்தவர் நாற்காலியைத் தேடுவது போல அப்புசாமி தன் சுற்றுப்புறங்களைத் தடவினார்.

கப்பென்று ஒரு ஜோடி வலுவான கரம் அவர் தோள்களைப் பற்றியது. "வளைகுடா அரசியல் வித்தகரே! இதோ உங்கள் உதவி நாடி வந்திருக்கும் ஸதாம் இங்கே இருக்கிறேன்." என்றவாறு ஸதாம் அப்புசாமியை மார்புறத் தழுவி, அவரது இடது தோளில் ஒரு கடியும் வலது தோளில் ஒரு கடியும் கடித்துத் தமது ஆழ்ந்த நட்புறவைத் தெரியப் படுத்தினார்.

வலி தாங்காமல் அப்புசாமி, "அய்யாங்!" என்று தோளைத் தடவிக் கொண்டார்.

ஸதாம் நல்ல தமிழில் பேசினார். "மத்தியக் கிழக்கு அரசியலின் சிக்கலறுக்



கும் சிங்காரா, நீங்கள்தான் இந்த ஸதாமைக் காப்பாற்ற வேண்டும்.''

அப்புசாமியின் உச்சந்தலை ஐஸ் கோன் மாதிரி ஆகி விட்டது. 'என்ன பெருமை டோய்! ஆகா, உனக்கு என்ன பெருமை டோய்!' என்று அவர் உள்ளம் குதூகலிக்க, சற்று முன் வரை இருந்த பயம் அகன்று குஷியாகி விட்டார்.

''அரே, ஸதாம் பாய்!'' என்று தைரிய மூட்டுவது போல ஸதாமைத் தட்டித் தந்தார். ''நாட்டுக்கு நீ பாட்சா. பச்சா மாதிரி பயப்படறியே...''

ஸதாம் பரபரப்புடன், ''நாம் சீக்கிரம் பேசி முடிக்க வேண்டும். வெள்ளை மாளிகை ஒற்றர்கள் எங்கு வேண்டுமானாலும் இருக்கலாம். அரசியல் ஆலோசகரே, உம்மைக் கேட்க விரும்பும் முக்கியமான கேள்வி இதுதான். தரைப் படை யுத்தத்தை நான் எப்போது துவங்கலாம்?'' என்று கேட்டார்.

அப்புசாமி சிறிது யோசித்தார். ''தமிழ் நாட்டிலே இப்போது தேர்தல் சமயம். செல்வி ஜெயலலிதா எல்லா அ.தி.மு.க. வேட்பாளர்களையும் விசாரித்துக் கொண்டிருக்கிறார் — யாருக்கு எந்தத் தொகுதி கொடுப்பது என்று. அதனால் தரைப் படை யுத்தத்தை நீங்கள் கொஞ்சம் லேட்டாகத் துவங்கலாம்,'' என்றார்.

அசந்து விட்டார் ஸதாம். சிண்டைப் பிய்த்துக் கொண்டார்.

''வளைகுடா வித்தகரே, அதற்கும் இதற்கும் என்ன சம்பந்தம்?''

அப்புசாமி சிந்தித்தவாறே சொன்னார்: ''ஆவடியில் டி. என். 07 1767 மோட்டார் சைக்கிளில் இரண்டு இலங்கைப் போராளிகள் வந்து செந்துரு என்ற பொம்பிளையின் கழுத்திலிருந்த செயினை அறுத்துக் கொண்டு போயிட்டாங்க.''

ஸதாம் தடுமாறினார். ஈராக் போருக்கும் இதற்கும் என்ன தொடர்பு இருக்க முடியும்?

அப்புசாமி இன்னமும் எதையோ ஞாபகப்படுத்திக் கொள்ள முயன்றார். ''அப்புறம்... திருமகள் எட்டாவது சிறப்புக் குலுக்கல், கிருஷ்ணகிரியில். மொத்தப் பரிசு 42 லட்சத்துக்கு மேல்.''

ஸதாமுக்கு அழுகையே வந்து விட்டது. நாத்தழுதழுக்க, ''திருமகள் சிறப்புக் குலுக்கலுக்கும் ஈராக் தரைப் படை யுத்தத்துக்கும் ஏன் முடிச்சுப் போடுகிறீர்கள்?'' என்றார்.

அப்புசாமி கடிந்து கொண்டார். ''அவசரக் குடுக்கை! இப்படி அவசரப் பட்டுத்தான் குவெய்த்தில் காலை வெச்சுட்டு இப்போ குய்யோ முறையோன்னு தடுமாறுகிறே. ஒரு சண்டை நடத்தணும்னா, உலகத்திலே மற்ற இடங்களிலெல்லாம், என்ன என்ன விவகாரம் எப்படி எப்படி நடந்துக்கிட்டிருக்கிறது என்கிற விவரத்தைத் தெரிஞ்சுக்கணும்...'' என்று சொல்லிக் கொண்டிருந்தவருக்குப் பத்திரிகையில் காலையில் படித்த சோதிடப் பகுதி நினைவுக்கு வந்தது. அதையும் இந்த ஆளிடம் சொல்லி விடலாம் என்று தோன்றியது.

''ஸதாம்'' என்றார். ''நீ இப்போ சமாதானமாப் போறதுதான் தேவலைன்னு தோணுது. ஏன்னா.. சனி இப்போ தனுசு ராசியிலிருந்து மகர ராசிக்குப் போகிறான். அப்புறம் இந்த வாரம் தீர பராக்ரமஸ்தானத்திலே சூரியன் சஞ்சரித்து வருவதாலே ஆக்கபூர்வமான வேலையிலே இறங்கலாம். தகப்பனார் உதவி, தந்தை வழிச் சொத்து அபிவிருத்தி, அரசாங்க நன்மை இதெல்லாம் கைகூடும். சுக்கிரனின் பலத்தால் கடனுதவியும், பெண்களால் சந்தோஷமும் உண்டாகும். அப்புறம் புதன் லாபஸ்தானத்துக்கு வர்றதாலே...'' அப்புசாமி சொல்லிக் கொண்டே போனார்.

''யோவ்! கிறுக்குக் கிழம்!'' தடாலென்று ஸதாமின் குரல் கர்ஜனையாக மாறியது. அப்புசாமி நிலைகுலைந்து போனார். ''ஸதாம்... ஸதாம்... நீயா இப்போ கத்தினே?'' என்றார் பயந்து.

''உங்க பாட்டனா பின்னே இந் நேரத்திலே இந்த இருட்டிலே வந்து கத்துவான்? யோவ் அரசியல் அரட்டை! இந்த ஸதாமைப் பற்றி நீ சரியாத் தெரிஞ்சுக்கலை...''

''டார்ச் நல்லா அடிச்சாத்தானே தெரிஞ்சுக்கலாம்,'' அப்புசாமி நடுங்கினார்.

''டேய்! உன் மண்டையிலே மசாலா ஏதாவது இருக்கும்னு பறந்து வந்தேன். நீ ஏதோ ரீல் விடறே. ஆனால் நான் உன்னை விடறதாக இல்லை. இந்தா இதைப் பிடி!'' என்று அப்புசாமியின் கையில் ஒரு கோணி மூட்டையில் நீளவாட்டில் கட்டியிருந்த பருமனான எதையோ ணங்கென்று திணித்தார்.

கனத்தை உணர்ந்ததும், சபலத்தோடு ''கட்டித் தங்கமா?'' என்றார் அப்புசாமி. ''நான் சொன்ன ஆலோசனைக்கு இவ்வளவு தங்கமா?''

ஸதாம் குரூரமாக ஒரு குருமாச் சிரிப்புச் சிரித்தார்.

''தங்கத்தை விட மதிப்பு மிக்கது. உலகத்தையே அச்சுறுத்தும் ஸ்கட் ஏவுகணை! வாஷிங்டனை வாஷிங் பவுடராக்க வைக்கும் சக்தி வாய்ந்தது! பத்திரமாக வைத்துக் கொள்ளும். கெட்டியாகப் பிடியும், தரையில் வைத்தால் உடனே வெடித்து மொத்த மெட்ராஸே சாம்பலாகி விடும்! முதல் பலி நீதான்!''

''அய்யாங்! அய்யாங்!'' என்று கத்தினார் அப்புசாமி. ''யோவ்! யோவ்! இன்னாயா ஸதாம் விளையாடறே?''

''விளையாட்டா? இதுக்குப் பேரு விளையாட்டா? மரியாதையா என் கட்டளைக்குக் கீழ்ப்படியவில்லையானால்...'' ஸதாமின் கைத் துப்பாக்கி அப்புசாமியின் குரல்வளையை அழுத்தியது.

அப்புசாமி குழறினார். ''துப்... துப்...

பாக்கியம் ராமசாமி

● சீனாவில் பல ஆண்டுகளாகத் தீராத தலைவலியினால் கஷ்டப்பட்ட ஒரு குடியானவனுக்கு, ஒரு நாள் வயலில் உழுது கொண்டிருந்த போது கூரிய அலகு ஒன்று தற்செயலாக அவன் காலில் குத்தி விட்டது. அன்று முதல் அவன் தலைவலி நின்று விட்டது. பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் நடந்த இந்நிகழ்ச்சியைக் கேள்விப்பட்ட சீன அரசன் 'பியூசி' ஒரு கூரிய கல் ஊசியைக் கொண்டு பலருடைய தலைவலியைத் தீர்த்து வைத்ததாக வரலாறு கூறுகிறது!

ஆதாரம்: சித்த மருத்துவம்.
தகவல்: ஆர். அரிகோபி.

ஸத்.. ஸத்.. ஸத்தாம்... என்னய்யா சொல்லிட்டுத் திடீர்னு குரவளையிலே துப்பாக்கி வைக்கிறே?''

''முட்டாளே! இதுதான்டா அரசியல்.. வீட்டு முன்னாலே கொட்டகை போட்டுக்கிட்டு நீ அடிக்கிற அரட்டைக்குப் பேரா அரசியல்! நான் சொல்றதையெல்லாம் உன் ரப்பர் காதாலே கேட்டுக்கோ. ஆனால் வாயைத் திறந்து ரகசியத்தை வெளியே விட்டியானால் என் ஒற்றர்கள் உன்னை ஸதக் ஸதக் பண்ணிடுவாங்க.'' என்ற ஸதாம் ஒரு துணியால் சும்மாடு சுற்றி அப்புசாமியின் தலையில் 'ஸ்கட்'டை ஏற்றுமதி செய்தார்.

''இந்தக் கோணிக்குள்ளே இருக்கறது ஸ்கட் ஏவுகணை என்கிறது உன் பெண்டாட்டிக்குக் கூடத் தெரியக் கூடாது. இதை நீ பத்திரமாக உன் வீட்டில் கொண்டு போய் வைத்துக் கொள். நான் டெலிபோனில் ஒரு நாள் சமிக்ஞைக் குரல் கொடுப்பேன்... 'குழந்தைக்கு விளக்கெண்ணெய் கொடுத்திடு' என்பதுதான் ரகசிய வார்த்தை. அதைக் கேட்டதும் நீ மொட்டை மாடிக்கு இந்த ஸ்கட்டை எடுத்திட்டுப் போய் அதிலே இருக்கிற ஒரு ஸ்விட்சை அமுக்கி விடணும். அவ்வளவுதான். அது நேரா வாஷிங்டன் போய் ஜார்ஜ் புஷ் இருக்கானே — என்னைச் சாவணும்னு சொல்றானே — அந்த ஆளுடைய படுக்கை அறைக்கே போய் டமால்னு விழும்... புரியுதா? வாஷிங்டன் குளோஸ்! ஏன் இந்த மெட்ராஸ் வழியாக ஸ்கட்டை வுடறேன் தெரியுமா? மாமூல் ரூட்லே வுட்டால் அமெரிக்காக்காரனுடைய பேட்ரியட் நம்முதை அடிச்சிடுது. அதனாலே உன் மூலமா வுடறேன்.''

''அய்யய்யோ! நான் மாட்டேன், மாட்டேன்,'' என்றார் அப்புசாமி.

ஸதாமின் கைத் துப்பாக்கி அப்புசாமியின் வாய்க்குள் நறுக்கென்று புகுந்தது. ''அடேய் துண்டு துண்டாச் சிதறிச் சாகணும்னு ஆசையா? மரியாதையாக நடந்து கொள். வெற்றிகரமாக இந்தக் காரியம் நீ நடத்தி விட்டால் உன் பெயரில் ஓர் எண்ணெய்க் கிணற்றையே எழுதி வைப்பேன்... நீ போகலாம்.'' அடுத்த கணம் ஸதாம் இருளோடு இருளாக மறைந்தார்.

அப்புசாமிக்கு வியர்த்தது. தலையின் மீது ஸ்கட் மூட்டை. கும்மிருட்டு. எங்காவது கை தவறி ஸ்விட்ச் மீது பட்டு ஏவுகணை அப்போதே புறப்பட்டு விட்டால்...

''சீதே! சீதே!'' என்று கார் நிறுத்தப்பட்டிருந்த இடத்தை நோக்கி இருட்டில் குரல் கொடுத்தவாறு வந்தார். மூச்சுத் திணறியது; தலை கனத்து, கழுத்து நெஞ்சுக்குள் எந்த வினாடியும் இறங்கி விடும் போலிருந்தது.

'கழுத்து உள்ளே போய் விட்டால் ஜிப்பாவை எப்படிப் போட்டுக் கொள்வது' என்று அத்தனை துன்பத்திலும் ஒரு பொறுப்பான கவலை வந்து அவரை அரித்தது!

''சீதே... சீதே! எங்கேடி இருக்கிறே? காரைக் கொண்டு வாயேண்டி சனியனே! நான் சர்வற மாதிரி கத்தறேனே... கேக்கலையா? இந்த மரத்துகிட்டேதானே காரை நிறுத்தியிருந்தே.''

அந்த இடம் காலியாக இருந்தது. சீதாப்பாட்டி காரை எப்போதோ எடுத்துக் கொண்டு போய் விட்டாள்.

''பாவி! நீ ஒரு பத்தினியா? தலையிலே குண்டை வெச்சு அனுப்பின அந்த ஸதாமைக் கூடச் சேர்த்துக்கலாம். காத்திருக்கேன்னு சொன்னவள் காரோடு போயிட்டியே கிராதகி!''

அப்புசாமி பிலாக்கணம் பாடியவாறு ஒவ்வொரு அடியாக இருட்டில் பயந்து நடுங்கி வைத்தவாறு ஈச்சாங்குட்டையிலிருந்து அவரது வீட்டுக்கு வந்து சேர்ந்த போது சீதாப்பாட்டி சிரித்தாள். ''ஹலோ! வெல்கம் சார்! தலையிலே என்ன மூட்டை? மிஸ்டர் ஸதாமுக்கு நல்லவிதமாக அட்வைஸ் செய்தீர்களா? யுத்தத்தை முடிக்க என்ன யோசனை தந்தீர்கள்?''

அப்புசாமி செத்து நைஸ்ரகச் சுண்ணாம்பாகியிருந்தார். ''பாவி! நடுக்காட்டிலே ராத்திரி என்னை அம்போ...'' மூச்சு இரைத்தது.

''எக்ஸ்ட்ரீம்லி ஸாரி ஜென்டில்மேன். ஹிஸ் எக்ஸலன்ஸி ஸதாம் உங்களை வீட்டிலே கொண்டு வந்து டிராப் பண்ணிட்டுப் போவார் என்கிற நினைப்பில் வந்து விட்டேன். சரி, சரி தலையிலே என்ன மூட்டை? தர்பூஸ் பழமா? அதெல்லாம் யார் சாப்பிடப் போறாங்க. டேய் பீமா... இங்கே வந்து இவர் தலையிலிருந்து மூட்டையை இறக்கி வைடா கீழே.''

''ஐயோ! ஜாக்கிரதை! ஜாக்கிரதை! ஸ்கட்டு! ஸ்கட்டு! ஏவுகணைடி! ஐயையோ! ரகசியத்தைச் சொல்லிட்டேனே...'' அப்புசாமி ஒரு கையால் வாயையும், மூக்கையும் சேர்த்துப் பொத்திக் கொண்டு அலறினார்.

பீமா ராவ் உள்ளேயிருந்து விரைந்து வந்தான். ''தாத்தா! ஏனு லக்கேஜு இது? ஹொரளகே ஏது இத்தே...'' என்று மூட்டையை அனாயாசமாகத் தூக்கினான்.

அப்புசாமி அலறினார்: ''டேய்! டேய்! குண்டுடா! ஏவுகணைடா! ஸ்கட்டுடா! ஸதாம்டா! உஸைன்டா! ஐயோ! எல்லோரும் செத்தோம்!''

சீதாப்பாட்டி புன்முறுவலுடன், ''என்ன உளறுகிறீர்கள்? வாட் ஹாப்பண்ட் டு யூ?

மிஸ்டர் ஸதாமுக்குக் கம்பெனி கொடுக்கிறேன் பேர்வழி என்று ஏதாவது ட்ரிங் பண்ணிட்டு வந்திருக்கிறீர்களா?'' என்றாள்.

இதற்குள் பீமாராவ் கோணியைப் பிரித்து விட்டான்.

அப்புசாமி கண்ணை இறுக்கி மூடிக் கொண்டிருந்தார்.

''மிஸ்டர் வளைகுடா அரசியல் வல்லூறு! மிடில் ஈஸ்ட் பொலிடிகல் ஜீனியஸ்! உங்க கண்ணைத் திறந்து நீங்க சுமந்து வந்த ஸ்கட்டைப் பாருங்க.. ப்ளீஸ்!'' என்றவாறு சீதாப் பாட்டி அப்புசாமியின் கைகளை அவர் கண்களிலிருந்து கஷ்டப்பட்டுப் பிரித்தாள்.

கோணியிலிருந்து எடுத்த வஸ்துவின் மீது பீமாராவ் 'டொங்!' என்று ஒரு தட்டுத் தட்டிக் காட்டினான்.

மிருதங்கம்!

''நெனைனு மிருதங்கா தாத்தா.. காபரா ஆகிவிட்டீரே,'' என்றான்.

கோணியில் மிருதங்கம் மட்டுமில்லாமல் நாலு பெரிய சைஸ் கடப்பைக் கற்களும் கனத்துக்காக வைக்கப்பட்டிருந்தன.

அப்புசாமியின் நெஞ்சை சீதாப் பாட்டி சற்று நீவி விட்டு லைம் ஜூஸ் தந்து ஆசுவாசப்படுத்தினாள். ''எக்ஸ்ட்ரீம்லி ஸாரி ஜென்டில்மேன். உங்க வளைகுடா அரசியல் அரட்டைச் சங்கத்தை இனிமேல் கலைத்து விடுவீர்கள் என்று நினைக்கிறேன். மிஸ்டர் ஸதாமாக வேஷம் போட்டுக் கொண்டு வந்தது, சலூன் சஞ்சீவிதான். ஃபார்மர்லி ஹிவாஸ் எ டிராமா ஆர்ட்டிஸ்ட். நீங்கள் கல்ஃப்வார் பாலிடிக்ஸில் ஓவராக இன்வால்வ் ஆகிறதைச் சொல்லி வருத்தப் பட்டேன். வீட்டை இப்படிச் சத்திரமாப் பண்றீங்களேன்னு கேட்டேன். 'கவலைப் படாதீங்க, தாத்தாவை வழிக்குக் கொண்டு வந்திடறேன்' என்றார். அவரும் பிரமாத நடிகர். நீங்களும் பிரமாதமான பயந்தாங் கொள்ளி!''

அப்புசாமி அத்தனை களைப்பிலும் உறுமினார்: ''ஸதாம் எந்தெந்த நாட்டின் மீதோ ஏவுகணை வுடறார். உன் மேலே ஒண்ணு வுடணும்டி!''

சீதாப் பாட்டி சிரித்தவாறு, ''நியூஸ் கேட்கலையா ஜென்டில்மேன்! ஸதாம் இப்போது அமெரிக்காவோடு சமாதானமாப் போயிட்டாராம். எனி ஹௌ... கல்ஃப் ரகளையோடு உங்க ரகளையும் சேர்ந்து ஒன்சுதே... தேங்க் காட்!''

அடுத்த வாரம் அப்புசாமி 'மூன்று கை முனிரத்தினத்தைச் சந்திக்கிறார்!'

மூன்று கை முனிரத்தினம் யார்? அவனை ஏன் அப்புசாமி வீட்டுக்குக் கூட்டி வந்து, குளிப்பாட்டி, சீராட்டி, பாராட்டி, பாலூட்டி, முட்டையூட்டிக் கொண்டாடினார்?

சீதாப்பாட்டிக்கு முனிரத்தினத்தால் வந்த அபாயம் என்ன? பாட்டி எப்படிச் சமாளித்தாள்?

# மாறுகண் கோளாறு பார்வையைக் குறைக்குமா?

○ கா. சு. வே. ரோகிணி, - கோவை — 16:

● மாறுகண் கோளாறு, உடல் ஊனத்தில் ஒன்றாகச் சேர்க்கப்படுவதற்கு என்ன காரணம்? இதனால் பார்வைக் குறைவு ஏற்படும் வாய்ப்பு உண்டா? இதைக் குழந்தையிலேயே அறுவைச் சிகிச்சை செய்து போக்கும் அவசியம் என்ன? வயதான பின்பு ஆபரேஷன் மூலம் நிவர்த்திக்க முடியாதா?

○○ டாக்டர் ஆர். ரவீந்திரன், கண் மருத்துவர்; சென்னை - 4:

பார்வையின் தரம் மூன்று வகைப்படும். இரண்டு கண்களிலும் ஒரே அளவான முழுப் பார்வை இருப்பது முதல் தரம்; இரண்டு கண்களும் ஒரே நேர்க்கோட்டில் இருப்பது இரண்டாவது தரம். இது இரண்டும் இருந்தால்தான் மூன்றாவது தரமாகிய, முப்பரிமாணக் காட்சி இருக்கும். முப்பரிமாணக் காட்சி, குழந்தை பிறந்த ஆறாவது மாதத்தில் தெரிய ஆரம்பித்து, ஒன்பதாவது வயதில் முழுமை அடைகிறது. ஒருவருக்கு மாறுகண் இருந்தால், முப்பரிமாணப் பார்வை இருக்காது. அதனால் ஒன்பது வயதுக்குள் மாறுகண்ணைச் சரிப்படுத்திவிட்டால், அவர்களுக்கு முப்பரிமாணப் பார்வை கிடைக்கும். ஒன்பது வயதுக்குமேல் ஆகி, ஆபரேஷன் செய்தால், இரண்டுதரப் பார்வை மட்டுமே இருக்கும்; முப்பரிமாணப் பார்வை இருக்காது. வாகனம் ஓட்டுதல், ராணுவப் பணி, இயந்திரங்கள் இயக்குதல் போன்ற துறைகளில் முப்பரிமாணப் பார்வை மிக அவசியம். ஆதலால்தான் மாறுகண் உள்ளவர்களுக்கு உடனடிச் சிகிச்சை அளிக்க வேண்டும். ஒரு சிலருக்கு, கண்களுக்கான பயிற்சி அல்லது கண்ணாடி அணிவதன் மூலம், மாறுகண்ணைச் சரிப்படுத்தி விடலாம். ஆனால், பெரும்பாலானவர்களுக்கு அறுவைச் சிகிச்சைதான் தேவைப்படும்.




○ சி. சந்திரசேகரன், வேலூர் — 1:

● சிலருக்கு விழிக்கோளம் அல்லது கண் பாவை நீல நிறம் மற்றும் பிரவுன் நிறத்தில் இருக்கிறது. இதற்கான காரணம் என்ன?

சருமத்தின் நிறத்தை நிர்ணயிப்பது போலவே, மெலனின் பிக்மென்ட் என்ற அம்சம்தான் கண் பாவை நிறத்தையும் நிர்ணயிக்கிறது. இது குறைவாக இருந்தால் விழிக்கோளம் அல்லது பாவை நீல நிறமாகவோ, இளம் பச்சையாகவோ, பிரௌன் நிறமாகவோ இருக்கும். இந்த மெலனின் பிக்மென்ட் அதிகமாக இருந்தால் விழிக்கோளம் டார்க் பிரௌனாகவோ, கறுப்பாகவோ இருக்கும். பெற்றோர்களின் மெலனின் பிக்மென்ட் எவ்வளவு இருக்கிறதோ, அதைப் பொறுத்தே குழந்தைகளுக்கு அமையும். தூய்மையான வெள்ளையாக ஒரு சிலருக்குக் கண் பாவை இருக்கும். இவர்களுக்கு மெலனின் பிக்மென்டே இருக்காது. இதற்கு 'ஆல்பனிசம்' என்று பெயர். இது பிறவியிலேயே உள்ள கோளாறு. இதற்கு மருத்துவம் கிடையாது.

தொகுப்பு: எஸ். வி. என்.

அட்மிஷன் நோட்டீஸ்




## ஸ்ரீ சங்கரா வித்யாஸ்ரம், உத்திரமேரூர்

(காஞ்சி ஹைரோடு, செங்கை - அண்ணா மாவட்டம்)

&

## ஸ்ரீ சங்கரா வித்யாஸ்ரம், விழுப்புரம்

(நடராஜ் ஐ.டி.ஐ. வளாகம், சாலாமேடு)

★ இயற்கை கிராம சூழ்நிலையில் அமைந்துள்ள எளிய குருகுலப் பள்ளிகள். மொத்தத்தில் 600 பேர்கள் தங்கிப் படிக்கத் திட்டமிட்டு, நடைமுறை ஆண்டில் 300 பேர்களை மட்டும் (ஆண் / பெண்) சேர்க்க ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகின்றன.

★ இப்பள்ளிகள் காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சங்கராச்சாரியார் ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளை பிரஸிடெண்ட் டிரஸ்டியாகப் பெற்று, அவரது நேரடி மேற்பார்வையில் நடைபெறுகின்றன.

★ பாடத் திட்டங்களுடன், கம்ப்யூட்டர் சயின்ஸ், பரத நாட்டியம், யோகா, கராத்தே, குத்துச்சண்டை, இசைக் கருவிகள் இசைத்தல், சங்கீதம், புகைப்படக்கலை முதலியவைகளையும் கட்டாயப் பாடமாக போதிக்கப் படுகின்றன.

★ பாடமொழி ஆங்கிலத்தைத் தவிர பிரெஞ்சு, ஹிந்தி, சமஸ்கிருதம், தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் போன்ற மொழிகளையும் போதிக்கின்றன.

★ கே.ஜி. முதல் 10-ஆம் வகுப்பு வரையில் எல்லோருக்கும் ஆண்டுக் கட்டணம் ரூ. 7,000/-க்கு மேல் வசூலிக்கப்படுவதில்லை.

★ பள்ளிகள் சிறுவர், சிறுமிகளின் உள்ளம், உடல், கலாச்சாரம், பண்புகள் வளர்ச்சிகளை நோக்கங்களாகக் கொண்டு, அவர்களை எதிர்காலத்தில் சிறந்த மாணவர்களாக உருவாக்குகிறோம்.

விவரங்கள் அடங்கிய பிராஸ்பெக்ட்ஸ் வேண்டுவோர் ரூ. 25/- மணியார்டர் மூலமோ, பாங்கு டிராப்ட் மூலமோ, மேற்கண்ட வித்யாஸ்ரமங்களின் முதல்வர்களுக்கோ, அல்லது செகரெட்டரி, ஜெய ஜெய சங்கரா எஜுகேஷனல் டிரஸ்டு, உஷா மெட்ரிகுலேஷன் பள்ளி அலுவலகம், 39 மேலண்டை இராஜ வீதி, காஞ்சீபுரம் - என்ற விலாசத்திற்கு அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம்.

டி.எம். நடராசன்,
நிர்வாக டிரஸ்டி.

காஞ்சி காமகோடி பீடாதிபதி
ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள்,
பிரஸிடெண்டு டிரஸ்டி.

- ADSTART.

• எம். ஆர். ஐ. மூலம் நோயாளி பரிசோதிக்கப்படுகிறார்...

• எந்தக் கோணத்தில் வேண்டுமானாலும் படமெடுக்கலாம்...





# தென்னிந்தியாவுக்கு வந்த நவீனக் கருவி!

• டாக்டர் சுஜராஜ்



'எத்தனையோ கருவிகளைக் கண்டு பிடிக்கிறார்கள்; ஆனால், இருதயத்தில் ஓடும் எண்ணங்களை அறிய ஒரு கருவி இல்லையே! அது இருந்தால், மற்றவர்களின் எண்ணங்களை அறிந்து, அதற்குத் தகுந்தாற் போல் நடந்து கொள்ளலாமே!' என்று, தமது ஆட்சி கலைக்கப்படுவதற்குச் சில நாட்கள் முன்பு, அப்போலோ மருத்துவ மனை விழாவொன்றில் கலைஞர் பேசியது நினைவிருக்கிறதல்லவா! எம். ஆர். ஐ. (Magnetic Resonance Imaging) என்கிற நவீன சோதனை செய்யும் கருவியைத் திறந்து வைத்துப் பேசும் போதுதான் கலைஞர் அவ்வாறு குறிப்பிட்டார்.

எம். ஆர். ஐ. என்கிற இந்தக் கருவியில்

அப்படியென்னதான் நவீனமிருக்கிறது? அது எதற்கு உபயோகப்படுகிறது? "சுருக்கமாகச் சொல்வதென்றால், உடலுக்குள் இருக்கும் குறைகளைக் கண்டறிய இது எக்ஸ்—ரே மாதிரி படமெடுக்கும் ஒரு கருவி தான் என்றாலும் எக்ஸ்—ரேவுக்கும் இதற்கும் நிறைய வித்தியாசமிருக்கிறது. எக்ஸ்—ரேவிலும் சி. டி. ஸ்கேன் செய்தும் கண்டறிய முடியாத விஷயங்களையெல்லாம் எம். ஆர். ஐ. படங்களில் தெளிவாகக் கண்டறியலாம்!" என்று விளக்குகிறார் டாக்டர் சுஜராஜ்.

"உதாரணத்திற்குப் புற்றுநோயை எடுத்துக் கொள்ளுங்கள். ஒருவருக்குப் புற்று நோய் இருக்கிறதென்பதை, ஓரளவுக்கு அந்த நோய் வளர்ந்த நிலையில்தான் எக்ஸ்—ரே, சி. டி. ஸ்கேன் போன்றவற்றின் மூலம் கண்டறிய முடியும். ஆனால், இந்த எம். ஆர். ஐ. யில் புற்றுநோயின் ஆரம்பத்தையே சுலபமாகக் கண்டுபிடித்து விடலாம்.

"இவற்றோடு தலையைப் படமெடுக்க வேண்டியிருந்தால் எக்ஸ்—ரே மூலம் சில கோணங்களில் மட்டுமே எடுக்க முடியும். ஆனால் இதில், ரொட்டியைச் சிறு சிறு மெல்லிய துண்டுகளாக வெட்டிப் பார்ப்பது போல் தலைப் பகுதியைத் தேவையான கோணங்களிலெல்லாம் கூறு போட்டது போல் தேவையான இடங்களைப் படமெடுத்துப் பார்த்து விட முடியும்.

"இதே போல் முழங்கால் மூட்டுக்குள் ஒரு பிரச்னை என்கிற போது, அதை விரிவாகப் பரிசோதனை செய்ய வேண்டுமானால், மூட்டெலும்புக்குள் சிறு துளை யிட்டு, அதற்குள் ஆர்த்ரோஸ்கோப்பைச் செருகி அதன் மூலம்தான் ஆராய்கிறோம். ஆர்த்ரோஸ்கோப் கொண்டு ஒரு குறிப்பிட்ட சுற்றளவுக்குத்தான் ஆராய முடியும். ஒருவேளை மூட்டின் மறுபுறம் பரிசோதிக்க வேண்டியிருந்தால், மறுபடியும் அந்தப் பக்கம் புதிதாக ஒரு துளையிட வேண்டியிருக்கும்.

"ஆனால், எம். ஆர். ஐ. இந்தத் துளையிடும் வேலைகளை இல்லாமல் செய்து விடுகிறது: மூட்டெலும்பின் எந்தப் பகுதியை வேண்டுமானாலும் வெளியிலிருந்தே நமக்குப் படமெடுத்துக் கொடுத்து விடுகிறது. எம். ஆர். ஐ. முழுக்க முழுக்கக் காந்த சக்தியைக் கொண்டே இயங்குவதால் (அதாவது வெளியிலிருக்கும் இக் கருவியின் காந்த சக்திக்கும் நமது உடலிலுள்ள காந்த சக்திக்கும் இடையிலான பௌதிக மாற்றம் தான் படமாக மாற்றப்படுகிறது) எக்ஸ்—ரே எடுக்கும் போது ஏற்படும் கதிர்வீச்சுப் பாதிப்புகள் என்பதெல்லாம் இதில் துளியும் கிடையாது. இப்படிப்பட்ட நவீனக் கருவியான இது தென்னிந்தியாவிலேயே முதன் முதலாக அப்போலோவில்தான் நிறுவப்பட்டுள்ளது!" என்றார் டாக்டர் சுஜராஜ்.

— சார்லஸ்

# சிவகாமியின்




### பதினைந்தாம் அத்தியாயம்

## கிளியும் கருடனும்

"கமலி!"

"கண்ணா!"

"எனக்கு ஒன்றுமே பிடிக்கவில்லை!"

"ஏன் அப்படி?"

"புதிய தளபதிக்கு வந்த வாழ்வை நினைக்க நினைக்கக் கோபமாய் வருகிறது."

"கோபித்து என்ன பயன்? அவர் யுத்த களத்துக்குப் போய், வீராதிவீரர் என்று பெயர் எடுத்து வந்திருக்கிறார்."

"யுத்தத்துக்குப் போக வேண்டுமென்று, என் மனமுந்தான் துடியாய்த் துடிக்கின்றது."

"யார் குறுக்கே விழுந்து மறிக்கிறார்கள்?"

"வேறு யார்? மாமல்லர்தான்! மாமல்லருக்கு ஏன் நான் ரதசாரதியானேன் என்று இருக்கிறது. அவராலேதானே, நானும் இந்தக் கோட்டைக்குள்ளேயே அடைந்து கிடக்க வேண்டியிருக்கிறது?"

"இல்லாமற் போனால் வெட்டி முறித்து விடுவாயாக்கும்!"

"எப்படியும் ஒரு நாளைக்கு, மாமல்லர் யுத்தத்துக்குப் போகாமல் இருக்க மாட்டார். அப்போது நானும் போகிறேனா, இல்லையா பார்! ஒருவேளை, நான் போர்க்களத்தில் வீர சொர்க்கம் அடைந்தால் என்னைப் பற்றிச் சின்னக் கண்ணனுக்குச் சொல்வாயல்லவா?"

"ஆகட்டும், ஆகட்டும்! வீட்டுக்குள்ளே உட்கார்ந்து, வீரம் பேசுவதிலே உனக்கு இணை, இந்தப் பல்லவ ராஜ்யத்திலேயே கிடையாது என்று கண்ணம்மாளிடம் சொல்கிறேன்."

"என்ன சொன்னாய்? கண்ணம்மாளா?"

"ஆமாம்; கண்ணம்மாளாய்த்தான் இருக்கட்டுமே?"

"போதும், போதும்! பூலோகத்தில் பெண்களே பிறக்கக் கூடாது என்று நான் சொல்வேன். கூடவே கூடாது."

"உண்மைதான்! ஆண் பிள்ளைகளைப் போன்ற நிர்மூடர்கள் இருக்கிற உலகத்தில், பெண்களைப் பகவான் படைக்கக் கூடாதுதான். உங்களால் நாங்கள் படுகிற கஷ்டம் எவ்வளவு என்பதை உணர்ந்து கொள்ளக் கூட உங்களுக்குச் சக்தி இல்லை."

"இது என்ன அபாண்டம், கமலி! உங்களை நாங்கள் அப்படி என்ன கஷ்டப் படுத்துகிறோம்?"

"சற்று முன்னால் யுத்தத்துக்குப் போய் நான் செத்துப் போகப் போகிறேன்; நீ வீட்டிலே சுகமாயிரு என்று சொன்னாயே? அது என்னைக் கஷ்டப்படுத்துகிறதல்லவா? தங்கச்சி சிவகாமியை எட்டு மாத காலமாக மாமல்லர் போய்ப் பார்க்காமலிருக்கிறாரே, அது அவளைக் கஷ்டப்படுத்துகிறதா காதா?"

"எப்போதும் உன் தங்கச்சியைப் பற்றியேதான் உனக்கு யோசனை. வேறு நினைவே கிடையாது."

"ஆமாம், கண்ணா! கொஞ்ச நாளாக

நான் அவளைப் பற்றியேதான் யோசித்துக் கொண்டிருக்கிறேன். யோசிக்க யோசிக்க வருத்தமாயிருக்கிறது. சிவகாமி எதற்காக மாமல்லர் மேல் காதல் கொண்டாள் என்று இருக்கிறது. கிளி கிளியுடனும், குயில் குயிலுடனும் கூடி வாழ வேண்டும். மரக் கிளையில் வாழும் பச்சைக் கிளி உச்சி வானத்தில் பறக்கும் கருடனுக்கு மாலையிட ஆசைப் படலாமா!''

''இதென்ன கமலி, இப்படிப் பேசுகிறாய்? கொஞ்ச நாளைக்கு முன்னாலெல்லாம் நீதானே உன் தங்கைக்கு இணை மூன்று உலகத்திலும் இல்லை என்றும், மன்னாதி மன்னர்களெல்லாம் அவள் காலில் வந்து விழுவார்களென்றும் சொல்லிக் கொண்டிருந்தாய்?''

''ஆமாம், கண்ணா! என் தங்கை மேலுள்ள ஆசையினால் அப்படியெல்லாம் சொன்னேன். ஆசையிருக்குமிடத்தில் அறிவு மழுங்கி விடும் அல்லவா? ஆர அமர யோசித்துப் பார்த்ததில், இதெல்லாம் நல்லதுக்கில்லை என்று தோன்றுகிறது. நான் சிவகாமிக்கு உடன்பாடாகப் பேசி, அவள் ஆசையை வளர்த்து வந்ததும் தப்பு; மாமல்லரின் ஓலைகளை நீ அவளுக்குக் கொண்டு போய்க் கொடுத்துக் கொண்டிருந்ததும் தப்பு!.....''

''இப்பேர்ப்பட்ட ஞானோதயம் உனக்கு எப்படி உண்டாயிற்று?'' என்று கண்ணன் பரிகாசக் குரலில் கேட்டான்.

''கொஞ்சமாவது வெட்கமில்லாமல், நீ 'சின்னக் கண்ணன், சின்னக் கண்ணன்' என்று சொல்கிறாயே, அவன் என் வயிற்றில் வந்த பிற்பாடுதான்!'' என்றாள் கமலி.

''இதென்ன கமலி! உன் தங்கை சிவகாமி மாமல்லரைக் கல்யாணம் செய்து கொள்வதற்கும் சின்னக் கண்ணனுக்கும் என்ன சம்பந்தம்? எனக்கு விளங்கவில்லையே?'' என்று கூறிக் கண்ணபிரான் 'கலகல' வென்று சிரித்தான்.

''சிரித்தாகி விட்டதா, கண்ணா!''

''ஆகி விட்டது!''

''அப்படியானால், நான் கேட்பதற்கு மறுமொழி சொல்லு! சக்கரவர்த்தி மாமல்லரைக் காஞ்சிக் கோட்டைக்கு வெளியே போகக் கூடாதென்று எதற்காகக் கட்டளையிட்டு விட்டுப் போனார்?''

''அதிலே என்ன அதிசயம் கமலி! அதிசயமும் இல்லை; இரகசியமும் இல்லை. மகேந்திர சக்கரவர்த்திக்கு மாமல்லர் ஏக புத்திரர் அல்லவா? யுத்த களத்திலே சக்கரவர்த்திக்கு ஏதாவது நேர்ந்து விட்டால், அடுத்தபடி பட்டத்துக்கு வர வேண்டியவராவது பத்திரமாயிருக்க வேண்டுமே என்றுதான். மந்திர மண்டலத்தாருக்கு அவ்விதமே சக்கரவர்த்தி கட்டளையிட்டு விட்டுப் போயிருக்கிறார் என்பது பிரசித்தமாயிற்றே...''

''பத்திரமாயிருக்க வேண்டுமென்றால், அதற்காகக் கோட்டைக்குள்ளேயே ஒளிந்து கொண்டிருக்க வேண்டுமா, கண்ணா! மாமல்லர் என்ன அவ்வளவு பயங்கொள்ளியா? கையினால் ஆகாதவரா? அல்லது அறியாக் குழந்தையா?''

''என் புத்திக்கு எட்டினது அவ்வளவுதான்! உண்மையான காரணம் உனக்குத் தெரிந்திருந்தால் நீதான் சொல்லேன், கமலி!''

''சொல்லட்டுமா? சிவகாமியின் மேல் மாமல்லருக்கு ஏற்பட்டிருக்கும் பிரியம் சக்கரவர்த்திக்கு எப்படியோ தெரிந்து விட்டது. அதை வளர விடக் கூடாது என்பது அவருடைய எண்ணம். கோட்டைக்கு வெளியில் போனால் எப்படியும் மாமல்லர் சிவகாமியைப் பார்க்கப் போவார் என்றுதான் அவரைக் கோட்டைக்குள்ளேயே இருக்கும்படி கட்டளையிட்டு விட்டுப் போனார்!''

''அப்படியானால் உங்கள் மகேந்திர சக்கரவர்த்திக்கு எங்கள் மாமல்லரைப் பற்றித் தெரியாதென்றுதான் அர்த்தம். அவ்வளவு சுலபமாக மாமல்லரின் மனத்தை மாற்றி விட முடியுமா, கமலி?''

''மகேந்திர சக்கரவர்த்தியின் தந்திர மந்திர சாமர்த்தியங்கள் உனக்குத் தெரியாது, கண்ணா! அவர் ஒரு காரியத்தை நினைத்து விட்டால், எப்படியாவது அதை நிறைவேற்றியே தீருவார் என்று உலகத்துக்கெல்லாம் தெரியுமே?''

''ஆனால் சக்கரவர்த்திக்கும் உன் தங்கையின் மேல் ரொம்ப அபிமானமாயிற்றே, கமலி! அவர் எதற்காகத் தடை செய்ய வேண்டும்?''

''அசட்டுக் கண்ணா! ஆயனச் சிற்பியின் மகள் மேல் அபிமானமாயிருப்பது ஒரு விஷயம். அவளைக் குமார சக்கரவர்த்திக்குக் கல்யாணம் செய்து வைப்பது வேறு விஷயம். என் தங்கச்சி வயிற்றில் நாளைக்குப் பிள்ளைக் குழந்தை பிறந்தால், என்னவெல்லாம் சிக்கல் ஏற்படும் என்று யோசித்துப் பார்!... இந்த யோசனையெல்லாம் சின்னக் கண்ணனால் எனக்கு வந்தது என்று சொன்னேனே, அதன் காரணம் இப்போது விளங்குகிறதா?''

''விளங்கவேயில்லை, கமலி!'' என்றான் கண்ணன்.

''உனக்கு ஒன்றுமே விளங்காது கண்ணா! குதிரைகளோடு பழகிப் பழகிக் குதிரைகளுக்கு இருக்கிற அறிவுதான் உனக்கும்



இருக்கிறது'' என்றாள் கமலி.

''இதோ பார், கமலி! நீ என்னைப் பற்றி என்ன வேண்டுமானாலும் சொல்லு! கேட்டுக் கொள்கிறேன். என் குதிரைகளைப் பற்றி மட்டும் ஒன்றும் சொல்லாதே! குதிரைகளுக்கு உள்ள அறிவு மனிதர்களுக்கு இருந்தால் இந்த உலகம் எவ்வளவோ மேலாயிருக்குமே!'' என்றான் கண்ணன்.

குதிரைகளைப் பற்றிக் கமலி கேவலமாகப் பேசியதில் கண்ணனுக்கு மிக்க கோபம் உண்டாகி விட்டது. பின்பு சற்று நேரம் அவன் எதுவும் பேசாமல், வேறு பக்கம் பார்த்துக் கொண்டிருந்தான் — கமலியும் ஏதோ யோசனையில் ஆழ்ந்திருந்தாள்.

எனவே, கண்ணன் தன்னைத்தானே சமாதானப்படுத்திக் கொண்டு, பேச வேண்டியதாயிற்று. ''நீ என்னதான் சொல்லுகிறாய் கமலி? மாமல்லர் உன் தங்கையைக் கல்யாணம் செய்து கொள்வதற்கு என்ன தடை?'' என்று கேட்டான்.

''கண்ணா! இத்தனை நாளாக நீ அரண்மனைச் சேவகம் செய்கிறாய். ஆனாலும் அரண்மனை நடைமுறை ஒன்றும் உனக்குத் தெரியவில்லை. இராஜாக்களும் இராஜகுமாரர்களும் கல்யாணம் செய்து கொள்ளுவதென்றால் நீயும் நானும் கல்யாணம் செய்து கொள்வது போலவா? மாமல்லருடைய மகன் ஒரு நாள் இந்தக் காஞ்சி சிம்மாசனத்தில் ஏற வேண்டியிருக்குமல்லவா?''

''இதைத் தெரிந்து கொள்ள அபாரமான அறிவு வேண்டியதில்லை. குதிரைகளுக்கு இருக்கும் அறிவு கூடப் போதுமே!''

''அப்படியானால் அந்த அறிவைச் செலுத்தி இன்னும் கொஞ்சம் யோசித்துப் பார்! சிற்பியின் மகள் வயிற்றிலே பிறக்கும் பிள்ளையைப் பல்லவ சிம்மாசனத்தில் ஏற்றி வைக்க முடியுமா?''

''ஏன் முடியாது? அதிலே என்ன கஷ்டம்? நமது அரண்மனைச் சிம்மாசனம் அப்படி ஒன்றும் அதிக உயரமில்லையே? நான் ஒருவனாகவே தூக்கி அதில் உட்கார்த்தி வைத்து விடுவேனே?''

''நீ விளையாடுகிறாய், கண்ணா! ஆயனச் சிற்பியின் பேரன் பல்லவ குலத்துச் சிம்மாசனத்தில் ஏறுவதற்கு நாட்டார் — நகரத்தார் சம்மதிப்பார்களா?''

''நாட்டார் — நகரத்தாரைச் சம்மதிக்கச் செய்வது என் பொறுப்பு. கமலி! நீ பார்த்துக் கொண்டே இரு! இரண்டு கையிலும் இரண்டு குதிரைச் சாட்டையை எடுத்துக் கொண்டு போய், நாட்டார் — நகரத்தாரின்



முதுகில் வெளுவெளு என்று வெளுத்துச் சம்மதிக்கும்படி செய்கிறேனா, இல்லையா, பார்!''

''அது மட்டுமல்ல, கண்ணா! மகேந்திர பல்லவரின் சித்தப்பா பேரன் ஒருவன் வேங்கிபுரத்தில் வளர்ந்து கொண்டிருக்கிறானே. உனக்குத் தெரியாதா? அந்த ஆதித்தவர்மன் பல்லவ சிம்மாசனத்துக்குப் போட்டிக்கு வர மாட்டானா?''

''வர மாட்டான் கமலி, வர மாட்டான். வேங்கிபுரம் அடியோடு போய் விட்டது. வேங்கியோடு ஆதித்தவர்மனும் நாசமாய்ப் போய் விட்டான். இனிமேல் வர மாட்டான்!''

''மேலும், நமது குமார சக்கரவர்த்தி மற்ற தேசத்து இராஜகுமாரர்களைப் போல் அல்லவே! ஆசைக்குச் சிவகாமியைக் கல்யாணம் செய்து கொண்டு பட்டத்துக்கு இன்னொரு இராஜகுமாரியைக் கல்யாணம் செய்து கொள்ள மாமல்லர் இணங்க மாட்டார் அல்லவா? அவருடைய சுபாவம் மகேந்திர சக்கரவர்த்திக்கும் நன்றாய்த் தெரியும். ஏகபத்தினி விரதங்கொண்ட இராமனைப் போன்றவர் அல்லவா நமது மாமல்லர்?''

''ஆமாம், கமலி! சந்தேகமே இல்லை. மாமல்லர் அது விஷயத்தில் இராமனையும் கண்ணனையும் போன்றவர்தான்!.... கோகுலத்துக் கண்ணனை நான் சொல்லவில்லை. அந்த அயோத்தி ராமனையும் இந்தக் காஞ்சிக் கண்ணனையும் போன்ற



## அருள்வாக்கு

காந்தக் கல் இருக்கிறது. அதோடு இரும்பு ஊசி அருகில் போனால் ஒட்டிக் கொள்கிறது. பதி விரதா சிரோன்மணிகளின் மனம் அவர்களுடைய பர்த்தாக்களிடம் போய்க் கவிந்து கொள்கின்றன. கொடிகள் மரங்களை அரவணைக்கின்றன. நதிகள் மகாசமுத்திரத்தில் சங்கமம் ஆகிக் கலக்கின்றன. இவை போல் நம் மனசானது தன்னை அறியாமல் ஈஸ்வரி ஈஸ்வரரிடம் லயிக்க வேண்டும் — கலக்க வேண்டும்.

நாம் செய்யும் அபசாரங்களை நினைத்துப் பாருங்கள். அப்படி இருந்தும் ஈஸ்வரர் நமக்குச் செய்யும் உபகாரங்களை மனசு எண்ணிப் பார்க்கட்டும். அப்படி மனசு சிந்தனை செய்கிற போது, காலத் திரயங்களிலும் நமக்குப் பந்துவாக இருந்து அத்தனை அபசாரங்களையும் க்ஷமித்துக் கொண்டு நமக்கு க்ஷணத்திலும் நினைக்கும் படியான உபசாரம் செய்த அவனைத் தவிர நாம் வேறு எதை நினைப்பது? ஆகவே அவன் நமக்கு அநுக்கிரகம் செய்கிற அந்தப் பிரபுவினிடத்தில் போய் நாம் நிற்க வேண்டாமா?

அப்படி நாம் போய் நிற்பதற்கு நாம் ஏதாவது காரணம் கற்பித்தால் அது வியாபாரம் ஆகி விடும். அதாவது பக்தி என்பது பண்டம் மாற்றுவது போல ஏதோ ஒன்றுக்கு ஒன்று கொடுப்பது போல் ஆகக் கூடாது. "பக்தி செய்கிறேன், நீ செல்வத்தைத் தா" என்றால் அது பரிமாற்றம் அல்லது வியாபாரம் என்பதாகும். அப்படி இல்லாமல், நாம் எதையும் கிஞ்சித்தும் கருதாமல், சர்வசதா அவனிடம் போய்ச் சேருவது ஒன்றை நினைத்து நினைத்துத் தன்னையும் அறியாது ஓடுகிற சித்த விருத்தி இருக்கிறதே அதற்குத்தான் பக்தி என்று பெயர்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

வர்!'' என்று கண்ணபிரான் தன்னைச் சுட்டிக்காட்டிக் கொள்ளவே, கமலிக்குச் சிரிப்புப் பீறிட்டுக் கொண்டு வந்தது.

சற்றுப் பொறுத்துக் கண்ணபிரான், ''கமலி! எனக்கு ஒரே அதிசயமாயிருக்கிறது! இவ்வளவு மர்மமான இராஜரீக விவகாரங்களெல்லாம் உனக்கு எப்படித் தெரிந்தது?'' என்று கேட்டான்.

''எல்லாம் எனக்கே தெரிந்து விட வில்லை, கண்ணா! நானாக யோசித்ததில் கொஞ்சம் தெரிந்தது; ஒட்டுக் கேட்டதில் மற்றதெல்லாம் தெரிந்தது.''

''என்னத்தை ஒட்டுக் கேட்டாய்? எப்போது கேட்டாய்?''

''நாலைந்து நாளைக்கு முன்னால் நீ வீட்டில் இல்லாத போது இங்கே ஒரு மனிதர் வந்திருந்தார், கண்ணா! அவரும் மாமாவும் வெகு நேரம் பேசிக் கொண்டிருந்தார்கள். சிவகாமியின் பெயர் காதில் விழவே நான் சுவர் ஓரமாய் நின்று கேட்டேன். இந்த விஷயமெல்லாம் அவர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். அதோடு....''

''அதோடு என்ன கமலி?''

''இன்னொரு முக்கிய விஷயமும் பேசினார்கள்.''

''சொல்லு!''

''சிவகாமிக்கு மாமல்லர் ஓலை எழுதுவதும், அதை நீ கொண்டு போய்க் கொடுத்து வருவதும் உன் அப்பாவுக்குத் தெரிந்திருக்கிறது. அதைப் பற்றி அந்தப் புது மனிதரிடம் சொல்லிக் கொண்டிருந்தார்!''

''ஆஹா! அந்தக் கிழ கோட்டான், அந்த இராவண சந்நியாசி, அந்த ருத்ராட்சப் பூனை அப்படியா செய்து கொண்டிருக்கிறது?'' என்றான் கண்ணபிரான். அவனுடைய தந்தையைப் பற்றித்தான் அவ்வளவு மரியாதையான வார்த்தைகளைச் சொன்னான்!

கமலி அவனுடைய வாயைப் பொத்தினாள்.

''அந்தப் புது மனிதர் யார் தெரியுமா, கமலி?'' என்று கண்ணன் கேட்டான்.

''தெரியாது; அதற்கு முன்னால் அவரை நான் பார்த்ததே இல்லை'' என்றாள் கமலி.

அந்தச் சமயத்தில் தெருவில் விரைவாக குதிரை பாய்ந்து வரும் சப்தம் கேட்டது. கண்ணன், கமலி இருவரும் பலகணி வழியாய் வீதியில் பார்த்தார்கள். நாலுகால் பாய்ச்சலில் சென்ற குதிரை மீது ஒருவன் போய்க் கொண்டிருந்தான். அவனுடைய முகம் ஒரு கணம் கண்ணன் வீட்டுப் பக்கம் திரும்பி மறு கணம் எதிரே நோக்கியது.

கமலி, ''கண்ணா! அவர்தான்! அந்தக் குதிரையில் போகிறவர்தான் அன்றைக்கு வந்து மாமாவுடன் பேசிக் கொண்டிருந்த

# SHADES

எண்ணத்தை வண்ணங்களில் தீட்டும் கண்கவரும் தறியிலிருந்து நேரடியாக வரவழைக்கப்பட்ட **Bengal, Cotton, Tangoil, Dacca,** மற்றும் ஜரிகைச் சேலைகள் **Tie & Dye, Hakoba, Mirror Work Blouses** நிறைந்து கிடைக்கும் இடம்... **SHADES...!**

## SHADES

**No.22,** சரோஜினி தெரு
தி. நகர்,
சென்னை - 600 017.
(ரங்கநாதன் தெரு அருகில்)




**NCL INDUSTRIES LIMITED** ☎ 237481, 234548
VI FLOOR, RAGHAVA RATNA TOWERS
CHIRAG ALI LANE, HYDERABAD-500 001. INDIA
GRAMS : ENCIELIND, TELEX : 0425-6887 NCLH-IN

வர்! அவர் யார், உனக்குத் தெரியுமா?'' என்று கேட்டாள்.

''தெரியும், கமலி! அவர்தான் ஒற்றர் தலைவன் சத்ருக்னன். மகேந்திர சக்கரவர்த்தியிடம் போய் விட்டுத் திரும்பி வருகிறான். ஏதோ விசேஷச் செய்தி கொண்டு வருகிறான். இதோ போய்த் தெரிந்து கொண்டு வருகிறேன்'' என்று கூறி விட்டுக் கண்ணன் வெளியேறினான்.

ஒரு நாழிகைக்கெல்லாம் அந்த வீட்டு வாசலில் 'கடகட' வென்ற சப்தத்துடன் ரதம் வந்து நின்றது. கண்ணபிரான் ரதத்தின் முன் தட்டிலிருந்து குதித்து உள்ளே ஓடி வந்து, சமையற்கட்டிலிருந்து வந்து கொண்டிருந்த கமலியின் மேல் மோதிக் கொண்டான்.

''அவ்வளவு என்ன அவசரம்?'' என்றாள் கமலி.

கண்ணபிரான், ''என்ன அவசரமா? யுத்தத்துக்குப் போகிற அவசரந்தான்!'' என்றான்.

''என்ன, யுத்தத்துக்குப் போகிறாயா?'' என்று கமலி பாய்ந்து வந்து கண்ணன் கழுத்தைத் தன் இரு கரங்களாலும் சேர்த்துக் கட்டிக் கொண்டாள்.

''ஆமாம், கமலி! ஒற்றர் தலைவன் சத்ருக்னன் மகேந்திர சக்கரவர்த்தியிடமிருந்து ஓலை கொண்டு வந்திருக்கிறான். மாமல்லர் போர்க்களத்துக்குப் போகச் சக்கரவர்த்தி அனுமதி கொடுத்து விட்டார். இன்னும் அரை நாழிகையில் மாமல்லர் கிளம்புகிறார், கமலி!....''

''நீயும் கிளம்புகிறாயா, கண்ணா! நிஜமாகவா?''

''இது என்ன கேள்வி, கமலி! மாமல்லர் போனால் நான் அவருடன் போகாமல் எப்படி இருக்க முடியும்?''

''மாமல்லர் சக்கரவர்த்தியின் திருக்குமாரர்; நாளைக்குப் பல்லவ சிம்மாசனத்தில் ஏறப் போகிறவர். அவர் போர்க்களத்துக்குப் போய் யுத்தம் செய்ய வேண்டும். நீ ஏன் போக வேண்டும்? எந்த ராஜா வந்தாலும் எந்த ராஜா போனாலும் நமக்கு என்ன வந்தது?''

''இது என்ன, கமலி? நேற்று வரை நீ இப்படியெல்லாம் பேசினதே இல்லையே? நாம் பிறந்த நாட்டுக்கு அபாயம் வந்திருக்கும் போது, நமக்கென்ன என்று நாம் வீட்டில் இருப்பதா?''

''நாட்டுக்கு அபாயம், நகரத்துக்கு அபாயம் என்று ஓயாமல் சொல்கிறாயே, கண்ணா! அப்படி என்ன அபாயம் வந்து விட்டது?''

''பல்லவ நாட்டுக்கு இது பொல்லாத காலம், கமலி. வடக்கேயிருந்து வாதாபி புலிகேசி மிகப் பெரிய சைனியத்துடன் வந்து கொண்டிருக்கிறார். அந்தச் சைனியத்தைத்தான் சக்கரவர்த்தி தடுத்து நிறுத்திக் கொண்டிருக்கிறார். இந்தப் பக்கத்தில் கங்க நாட்டு ராஜாவுக்கு அதற்குள் அவசரம் பொத்துக் கொண்டு விட்டது. புலிகேசிக்கு முன்னால் தான் காஞ்சிக்கு வந்து விட வேண்டுமென்று மேற்குத் திக்கிலிருந்து படை எடுத்து வந்து கொண்டிருக்கிறான். கங்க நாட்டு ராஜாவின் பெயர் என்ன தெரியுமா, கமலி! துர்விநீதன்! — துரியோதனனுடைய மறு அவதாரம் இவன்தான் போலிருக்கிறது. இந்தத் துர்விநீதனை எதிர்க்கத்தான் மாமல்லர் கிளம்புகிறார், கமலி! நானும் கிளம்புகிறேன். இத்தனை நாளும் நான் எப்போது வரும் என்று ஏங்கித் தவித்துக் கொண்டிருந்த சந்தர்ப்பம் வந்திருக்கிறது. மனப்பூர்வமாக, உற்சாகமாக எனக்கு விடை கொடுத்து அனுப்பு!''

''கண்ணா! நான் என்ன செய்யட்டும்? என் மனத்தில் ஏனோ உற்சாகமில்லை. என் தங்கை சிவகாமியை நினைக்க மனச்சோர்வு அதிகமாகிறது. அவளுடைய தலைவிதி என்னவோ என்று எண்ண எண்ண, ஏக்கமாயிருக்கிறது.''

''ஆகா! முக்கியமான விஷயத்தைச் சொல்லாமல் விட்டு விட்டேனே? மகேந்திர சக்கரவர்த்தியைப் பற்றி நீ என்னவெல்லாமோ சந்தேகப்பட்டாய் அல்லவா, கமலி! அதெல்லாம் சுத்தத் தப்பு! சக்கரவர்த்தி என்ன சொல்லி அனுப்பியிருக்கிறார், தெரியுமா? மாமல்லரைப் போர்க்களத்துக்குப் போவதற்கு முன்னால் நேரே ஆயனர் வீட்டுக்குச் சென்று ஆயனரையும் சிவகாமியையும் உடனே காஞ்சிக் கோட்டைக்கு அனுப்பச் சொல்லியிருக்கிறார். ஒருவேளை நானே அவர்களை ரதத்தில் ஏற்றிக் கொண்டு வந்து இங்கே விட்டு விட்டுப் போனாலும் போவேன். மகேந்திரப் பல்லவரைப் பற்றி இப்போது என்ன சொல்கிறாய், கமலி! அவர் நல்லவரா, பொல்லாதவரா?'' என்று கண்ணபிரான் தலை நிமிர்ந்து கர்வத்துடன் கேட்டான்.

''எப்படியாவது எல்லாம் நன்றாக முடியட்டும், கண்ணா; நீயும் போர்க்களத்திலிருந்து க்ஷேமமாய்த் திரும்பி வர வேண்டும்!'' என்று கமலி கூறிய போது, அவள் கண்களிலிருந்து அருவி பெருகியது.

(தொடரும்)



• மல்டிபிள் ஜிம் பயிற்சி இயந்திரம்.

# உடலைப் பலப்படுத்தும் இயந்திரங்கள்

அடையாறு பார்க் ஷெராடன் ஓட்டலில் உள்ளே நுழைந்து, இடது புறமுள்ள நீச்சல் குளத்தையும், பாட்மின்டன் கோர்ட்டையும் கடந்து உள்ளே போய், ஹெல்த் கிளப் கதவைத் திறந்தால், நாலா திசைகளிலும் நீங்களே தெரிவீர்கள்.

பயிற்சிக் கூடத்தின் சுவர்கள் எல்லாமே கண்ணாடியால் ஆனவை! ஸ்டீம் பாத்; செளனா பாத்; ஜக்கூசி பாத்; வைப்ரேட்டிங் பெல்ட்; ரோலர்கள்; ஜாகர்கள், மல்ட்டி — ஜிம் எடைப் பயிற்சி; ட்ரீகார் வாக்கர்; உடற்பயிற்சி சைக்கிள் என்று உடல் ஆரோக்கியத்துக்கு வழி வகுக்கும் ஏராள இயந்திரங்கள், வசதிகள் குவிந்திருக்கின்றன.

"எல்லாமே இறக்குமதியானவையா?"

"அல்ல. கம்ப்யூட்டர் பொருத்தப்பட்ட ட்ரீகார் வாக்கர், எக்சர்சைஸ் சைக்கிள் இரண்டைத் தவிர, மற்றவை எல்லாமே என்னுடைய டிசைனில் இங்கேயே உருவாக்கப்பட்டவை!" என்கிறார் எம். ஆர். ரெட்டி; ஹெல்த் கிளப் மேலாளர். குவாலியர் உடற்பயிற்சிக் கல்லூரியில் 'மாஸ்டர்ஸ் இன் ஃபிஸிகல் சயன்ஸ்' பட்டதாரி. சென்னையில் பிப்ரவரி 9, 1974 இல் முதல் முதலாக ஒரு ஓட்டலில் ஹெல்த் கிளப் உருவாக்கி, பிறகு ஜாம்பியா நாட்டுத் தேசிய உடற்பயிற்சிக் கல்லூரியில் பல ஆண்டுகள் பணியாற்றி விட்டுத் திரும்பிய பிறகு, இங்கே 'பார்க் ஷெராடனி'ல், இந்தியாவிலேயே முதல் முறையாக, நவீன ஹெல்த் கிளப்பை அமைத்தவர்.

ஸ்டீம் பாத்துக்கும் செளனா பாத்துக்கும் என்ன வேறுபாடு?

இரண்டுமே பத்துப் பதினைந்து நிமிடத்தில், அதிகமான வியர்வையை வெளியேற்றிவிடும். 'ஸ்டீம் பாத்'தில் நீராவி முறை என்றால், 'செளனா பாத்'தில் வெறும் டிரை ஹீட். 'ஜக்கூசி பாத்'தை 'வேர்ல்பூல் பாத்' என்றும் சொல்வதுண்டு. நீர், சுழற்சியாகப் பாய்ந்து வெளியேறிக் குளிப்பாட்டி விடும்!

மாலையில் ஹெல்த் கிளப்பில் பார்த்த போது சில அயல்நாட்டுக்காரர்கள் மட்டுமே பயிற்சிகள் செய்து கொண்டிருந்தார்கள். காலையில்தான் உள்ளூர் அங்கத்தினர்கள் ஏராளம். பத்து மணி முதல்

* ரெட்டி




நான்கு மணி வரை பெண்கள் மட்டுமே. வருடச் சந்தா ஆறாயிரம் ரூபாய். ஒரு சமயத்தில் இருநூறு அங்கத்தினர்களுக்கு மேல் அனுமதிப்பதில்லையாம். அதனால், ''விண்ணப்பம் செய்துவிட்டுக் காத்திருப்பவர் நூற்றுக்கணக்கில்...'' என்கிறார் இவர்.

''சரி. இந்த உடற்பயிற்சியால் என்ன பலன்?''

''டென்ஷன் குறைகிறது. தேவைப்படுமானால் உடல் எடையைக் குறைத்துக்கொள்ள உதவுகிறது. சரியாகத் திட்டமிட்டுப் பயிற்சி செய்தால் ரத்த அழுத்தத்தைக் குறைக்க முடிகிறது. ஊளைச் சதையைக் குறைத்து, தசைகளின் வலுவைக் கூட்ட உதவுகிறது. ரத்தத்தில் சர்க்கரை, உப்பு இரண்டையுமே கட்டுப்பாட்டுக்குள் வைக்க முடிகிறது. படபடப்புக் குறையும் போது, வாழ்க்கையை நிம்மதியாக நீண்ட நாட்களுக்கு அனுபவித்து வாழ முடிகிறது!'' என்கிறார் ரெட்டி.

பெண்கள் பிரசவித்த பிறகு, பருக்கும் வயிற்றுப்புறச் சதையைச் சிராக்க, 'அப்டாமினல் எக்சர்சைஸ்' சொல்லிக் கொடுக்கிறார்.

அப்படியானால், ஆண்களுக்கு? (அதாவது தொந்தி விழுந்த ஆண்களுக்கு?) அவர்களுக்கும் இருக்கிறது உடற்பயிற்சி.

''முதுகுப்புற வலி இப்போது பரவலாக உள்ள குறை. இதற்கு என்ன செய்கிறீர்கள்?''

''சில, முறையான யோகா பயிற்சிகள் கற்றுத் தரப்படுகின்றன. முதுகுத் தசைகள் அத்தனை வலுவானவை அல்ல. அவற்றுக்கு வலுப்படுத்தும் பயிற்சிகள் அளிக்கப்பட்ட பிறகு வலி மறைகிறது,'' என்கிறார் ரெட்டி. ''சாதாரணமாகவே, வலு மிக்க தசைகளின் உதவியை முதலில் பயன்படுத்தி, பிறகு வலு குறைவான பகுதிகளை உபயோகிக்க வேண்டும். உதாரணமாக, தரையில் இருந்து ஒரு பொருளை எடுக்கும் போது, முழங்காலை மடித்து, வலுவான தொடையில் பாரம் தாங்கி, அமர்ந்து எடுக்க வேண்டும். நின்ற வாக்கிலேயே குனிந்து எடுக்கும் போது, வலுவில்லாத முதுகுப் பகுதி பாதிக்கப்படுகிறது,'' என்கிறார் ரெட்டி.

ப்ரீ கார் வாக்கர் இயந்திரத்தின் மூலம் நாம் நின்ற இடத்திலிருந்தபடியே வாக்கிங் போகலாம். ஜாகிங் செய்யலாம். எப்படி? அதில் கன்வேயர் பெல்ட் ஒன்று இருக்கிறது. அது கம்ப்யூட்டர் மூலம் நம்முடைய தேவைக்குத் தகுந்த வேகத்தில் இயங்கும்.



* வாக்கிங், ஜாகிங் இயந்திரத்தில்...

## சாதனை புரிந்த பெண் டாக்டர்!

**சா**தாரணமாக நரம்பியல் துறை என்பதே மிகவும் கஷ்டமான துறை. அதனால் கடுமையான உழைப்புக்கு அஞ்சாதவர்கள் மட்டும்தான் அத் துறையைத் தேர்ந்தெடுத்துப் படிப்பார்கள். அப்படித் தேர்ந்தெடுத்துப் படிப்பவர்கள் கூட ஒன்று நரம்பியல் நிபுணராகத் தேர்ச்சி பெற்றிருப்பார்கள்; அல்லது நரம்பியல் அறுவைச் சிகிச்சை நிபுணராகத் தேர்ச்சி பெற்றிருப்பார்களே தவிர, இரண்டிலும் தேர்ச்சி பெற்றிருக்க மாட்டார்கள்.

நரம்பியல் நிபுணர் மற்றும் நரம்பியல் அறுவைச் சிகிச்சை நிபுணர் என்று இரண்டு துறைகளிலும் வெற்றிகரமாகத் தேர்ச்சி பெற்றிருப்பவர்கள் இந்தியாவிலேயே இரண்டு பேர்தான். ஒருவர் கேரளாவைச் சேர்ந்த டாக்டர் கிரீஷ். இன்னொருவர்



சென்னையைச் சேர்ந்த டாக்டர் ப்ரீத்திகாச் சர்ரி.

''இப்படி இரண்டிலும் தேர்ச்சி பெற வேண்டும் என்கிற எண்ணம் உங்களுக்கு எப்படி வந்தது?''

''ஒரு துறையில் தேர்ச்சி பெற்ற பிறகு, நோயாளிகளைக் கவனிக்கும் நேரம் போக மற்ற நேரம் எனக்கு போரடிப்பது போல் தோன்றியது. அதனால் அடுத்த துறையிலும் சேர்ந்து படித்துத் தேர்ந்தேனே தவிர, மற்றபடி விசேஷமான லட்சியம் எதையும் வைத்துக் கொண்டு படிக்கவில்லை!'' என்று சிரித்துக் கொண்டே கூறுகிறார் ப்ரீத்திகா.

''இரு துறைகளிலும் தேர்ச்சி பெற்றிருப்பதால் ஏதாவது புதிய அனுகூலம் இருக்கிறதா?''

''நான் வெறும் நரம்பியல் நிபுணராக மட்டும் இருந்தால் அறுவைச் சிகிச்சைக்கு நரம்பியல் அறுவைச் சிகிச்சை நிபுணருக்கு எனது நோயாளிகளைச் சிபாரிசு செய்து அனுப்ப வேண்டியிருக்கும். இப்போது அந்த வேலை இல்லை. நானே இரண்டையும் கவனித்துக் கொள்ளலாமல்லவா! அது தான் எனக்குக் கிடைத்திருக்கும் சிறப்பான அனுகூலம்!'' என்கிறார் ப்ரீத்திகா.



சந்திப்பு: **எஸ். ஐ.**

**யோசனை தெரிவித்த வாசகி:**
**எஸ். ஜெயந்தி,**
**சென்னை — 13.**

நாம் அதன் மேல் நின்று கொண்டு வெறுமனே கால்களை மாறி மாறித் தூக்கி வைத்துக் கொண்டிருந்தால் போதும்; நாம் ஒரே இடத்தில் நின்று கொண்டு அதைச் செய்தாலும் பெல்ட் நகர்ந்து கொண்டே இருப்பதால் நாம் சாதாரணமாகத் தரையில் நடந்து செல்வது போலவே இருக்கும். அதே மாதிரி ஜாகிங்கும் செய்யலாம்.

இவற்றோடு இன்னொரு வசதியும் உண்டு. நாம் மலைப் பாதையில் வாக்கிங் போகவோ ஜாகிங் செய்யவோ விரும்பினால் அதற்கும் ஒரு பட்டனைத் தட்டினால் போதும்; அந்த பெல்ட் நமது தேவைக்குத் தகுந்தபடி ஒருபுறம் உயர்ந்தும் மறுபுறம் தாழ்ந்தும் மலைப் பாதையில் வாக்கிங் போகிற உணர்வைத் தந்து விடும். கூடவே நமது பயிற்சியின் போது நம் உடலிலிருந்து எத்தனை கலோரி சக்தி வெளியேறுகிறது என்பதையும் கூட அதிலுள்ள கம்ப்யூட்டர் நமக்குக் கணக்கிட்டுச் சொல்லி விடுகிறது!

எர்கோ மீட்டர் — பயிற்சி — சைக்கிளிலும் இந்தக் குட்டி கம்ப்யூட்டர் பொருத்தப்பட்டிருக்கிறது. உங்கள் வயது, எடை எல்லாம் அதற்குச் சொல்லிவிட்டு, அதற்குத் தகுந்த பயிற்சி நேரத்தை அது குறித்துக் கொடுத்தவுடன், பெடலைச் சுழற்ற ஆரம்பிக்கலாம்!

**நீ**ச்சல் தெரிந்தவர்களுக்கு நீரிலேயே சில பயிற்சிகள் அளிக்கப்படுகின்றன. இதை அக்வா — டைனாமிக்ஸ் என்கிறார்கள்.

உடற்பயிற்சியை எப்போது வேண்டுமானாலும் செய்யலாம். காலைதான் நமக்கு ஏற்றதாயிருப்பதால், மற்ற நேரங்களில் செய்யக் கூடாது என்பதில்லை.

''வெளிநாட்டுப் பயணிகள் எவரும், ஓட்டலில் நுழைந்தவுடன் ஹெல்த் கிளப் வசதி இருக்கிறதா என்று பார்க்கிறார். அவர்கள் நாட்டுத் தரத்துக்கு அவை இருக்க வேண்டும் என்பதில் எனக்கு அக்கறை அதிகம். இதனாலேயே, இந்த ஹெல்த் கிளப் இந்தியாவிலேயே மிக நவீனமான வசதிகள் கொண்டதாக இருக்கிறது.'' என்கிறார் ரெட்டி.

''வெற்றுக் காலுடன் தரையைப் பாதம் ஸ்பரிசிக்க நடப்பது இப்போது ஜப்பானில் பிரபலமாகி வருகிறது. தங்கள் குழந்தைகளைக் காலணி எதுவும் இல்லாமல், பல இடங்களுக்கும் அங்கே பெற்றோர் அழைத்துச் செல்லுவதைப் பழக்கி வருகின்றனர். உடம்பில் அப்போதுதான் மாக்னடிக் சக்தி உருவாகும். அது இருக்கும் போது நோய்கள் தாக்குவதில்லை!'' என்கிறார் ரெட்டி.

''இத்தனை கண்ணாடிகள் எதற்கு?''

''உங்களை நீங்களே பார்த்துக் கொள்ளும் போது திருப்தியுடன் உண்டாகும் குதூகலமான மனநிலைக்கு ஈடாக எதுவும் இல்லை! அதுவும் பயிற்சிகள் செய்யும் போது நீங்களே உங்களைப் பார்த்து முன்னேற்றத்தை எடை போட்டுக் கொள்வது மிகவும் குதூகலமளிக்கும் விஷயமல்லவா! அதற்குத்தான்!''

— **சித்தார்த்.**



**ஹெ**லிகாப்டரின் படபட சப்தம் மரங்களில் தங்கியிருந்த ஏராளமான பறவைகளின் சந்தோஷ கணங்களைக் கலைத்திருக்க வேண்டும். சிறகுகளை அடித்தும், கீச்கீச் சிட்டும் தங்களின் சம்மதமின்மையை வெளிப்படுத்தின.

ஹெலிகாப்டர் 'யுனிவர்ஸா ஆராய்ச்சி நிலைய'த்தின் எதிரேயிருந்த பொட்டல் வெளியில் இறங்கியது.

முதலில் இருவர் இறங்க, மூன்றாவதாய் இறங்கிய நபரைப் பார்த்ததும் ஆராய்ச்சி நிலையத்தின் காவலாளிக்கு நாடித் துடிப்பு எகிறியது.

டீ. வீ. திரைகளில் இடைவிடாது வந்து போகும் முகம். தினப் பத்திரிகைகளை ஆக்ரமித்திருக்கும் முகம். வீட்டுச் சுவர்களில், காலண்டர்களில், நோட்டுப் புத்தக அட்டைகளில், தெருவோர கட் — அவுட்களில், நாடு முழுவதிலும்...

அதிபர். நாட்டின் அதிபர்.

உள்ளே அவசரமாய் ஓடினான்.

''என்ன?'' என்றாள் ஷர்லி.

சொன்னான்.

அவன் பதற்றம், அவளை ஸ்கட் ஏவுகணையாய்த் தாக்க, முதன்மைக் கூடத்திற்கு விரைந்தாள்.

இரண்டாய் வெட்டப்பட்டுக் குற்றுயிராய்க் கிடந்த 'கினி—பிக்'கின் இதயத் தசைகளுள் அட்ரீனலினைச் செலுத்தப் போன

# நான்-1; நான்-2

டாக்டர் அலக்ஸ், ஷர்லியைப் பார்த்ததும் ''என்ன?'' என்றார் பார்வையால்.

சொன்னாள்.

நெற்றி நெரித்தார். 'இந்தக் கொடூரன் ஏனிங்கு வந்திருக்கிறான்? எதுவும் தேவையென்றால் நம்மைக் கூப்பிட்டல்லவா அனுப்பியிருப்பான்?' பதற்றமாயிருந்தது. 'நம்மைத் தேடி வருவதாயிருந்தால்...? அவசரப்படாதே மனமே... பார்க்கலாம்...'

வாசலுக்கு வந்து கை குவித்துப் பணிந்து, ''வணக்கம். வருக...'' என்றார். ''உங்களின் வருகையால் என் ஆராய்ச்சி ஸ்தலம் புனிதப்பட்டது...''

''உம்மிடம் தனித்துப் பேச வேண்டும்,'' என்றார் அதிபர். ஒரு மெய்க்காப்பாளன் முன் வந்து ஒரு பெட்டியைத் தந்து, விறைத்து, சல்யூட் அடித்துப் பின்னே போனான்.

இருவரும் முதன்மைக் கூடத்திற்கு வந்தார்கள். அமர்ந்தார்கள். பெட்டியைத் திறந்து ஒரு மருத்துவ சஞ்சிகையை எடுத்து மேஜையின் மீது போட்டார் அதிபர். டாக்டர் அலக்ஸ் வியப்பால் விழி விரித்தார். அதில் டாக்டர் அலக்ஸ் எழுதிய ''குளோனிங்'' பற்றிய ஆராய்ச்சிக் கட்டுரை வெளிவந்திருந்தது.

''ஒரு மனிதனை அச்சில் வார்த்தாற் போல் — அவனின் கார்பன் காப்பியாக — அவனுடைய குழந்தையை உருவாக்கலாம் என்று இதில் நீர் எழுதி இருக்கிறீர். விளக்கிச் சொல்லும். கொஞ்சம் புரியவில்லை,'' என்றார் அதிபர்.

ஏன் என்று கேட்க நினைத்தார் அலக்ஸ். 'ம்ஹூம்.. வேண்டாம். கேட்பது கூட ராஜ குற்றமாகி விடலாம். வல்லான் கேட்கிறான். சொல்லித்தான் ஆக வேண்டும்.'

''முழுக்க முழுக்க மருத்துவ விஞ்ஞானம். சற்றே உங்களுக்கு போரடிக்கலாம்,'' என்றார் தயங்கி.

''பரவாயில்லை...''

''ஆண் விந்தும், பெண் முட்டையும் இணைவதால் பிறப்பது குழந்தை. ஆண் விந்து இல்லாமலேயே பிறக்கும் குழந்தைதான் குளோன்...'' என்று ஆரம்பித்தார் அலக்ஸ்.

''எப்படி?''

''நம் உடலில் இரு வகையான செல்கள் இருக்கின்றன. ஒன்று உடல் செல். மற்றது செக்ஸ் செல். செக்ஸ் செல் என்பது ஆண் விந்தினையும், பெண் முட்டையையும் குறிக்கும். செக்ஸ் செல்கள் தன்னிடத்தில் இருபத்தி மூன்று குரோமோசோம்களைக் கொண்டவை. உடல் செல்கள் நாற்பத்தி ஆறு குரோமோசோம்களைக் கொண்டவை.

''பெண் முட்டையுடன், ஆண் விந்து சேரும் போது, ஆண் விந்திலுள்ள இருபத்தி மூன்று குரோமோசோம்களைத் தன்னகத்தே பெற்று நாற்பத்தியாறு குரோமோசோம்களைக் கொண்ட ஒன்றாய் மாறி பின் அது வளர்ந்து குழந்தை ஆகிறது...''

கொட்டாவிவிட்டபடி, ''குரோமோசோம்கள் என்றால்...?'' என்றார் அதிபர்.

''செல்களின் கருவுக்குள் உள்ள நுண்ணிய இழைகள். நம் குணத்தை, நிறத்தை, உயரத்தை மற்றும் அனைத்தையும் நிர்ணயிக்க வல்லவை...''

''மேலே சொல்லும்...'' என்றார் அதிபர்.

''பெண் முட்டையிலுள்ள இருபத்தி மூன்று குரோமோசோம்களை எடுத்து விட்டு, பதிலாக உடல் செல்லிலுள்ள உதாரணத்துக்கு தோலின் ஒரு செல்லிலிருந்து 46 குரோமோசோம்களை எடுத்து அதனுள் வைத்து விட்டால் கூட அது குழந்தையாய் வளர ஆரம்பித்து விடும். அந்தக் குழந்தைதான் குளோன். யாருடைய உடல் செல்லின் குரோமோசோம், பெண் முட்டைக்குள் செலுத்தப்பட்டதோ அவரின் அச்சாகவே அந்தக் குழந்தை — குளோன் — இருக்கும்.

''குழந்தை என்பது பெற்றோர் இருவரின் கலவை. குளோன் என்பது யாரின் உடல் செல்லின் குரோமோசோம்கள் பெண் முட்டைக்குள் செலுத்தப்பட்டதோ அவரின் கார்பன் காப்பி.

''உங்கள் உடல் செல் குரோமோசோம்களைப் பயன்படுத்திக் குளோன் தயாரிக்கப் பட்டால், நீங்கள் பிறந்த போது எப்படி இருந்தீர்களோ அப்படியே அச்சு மாறாமல் இருக்கும். உங்கள் கன்னத்தின் மச்சத்திலிருந்து புருவ முடி வரை அனைத்தும்.''

''ஸோ, இந்தக் குளோன் உருவாவதில் பெண்ணிற்குப் பங்கே இல்லை.''

''அப்படியில்லை'' என்றார் அலக்ஸ். ''பெண்ணிடமிருந்துதானே 'முட்டை'யைப் பெற வேண்டும். அத்துடன், குளோனை முழுதுமாய் ஆராய்ச்சிக் கூட டெஸ்ட் ட்யூபில் வளர்த்து விட முடியாது. ஒரு குறிப்பிட்ட வளர்ச்சி வரைதான் ஆராய்ச்சிக் கூடத்தில் செயற்கையாய்த் தயாரிக்கப்பட்ட 'சத்துத் திரவத்தில்' வைத்திருக்க முடியும். பின் அந்தக் கருவை ஒரு பெண்ணின் கருப்

சகுபர் சாதிக்




''உலகத்திலேயே அதிகஅளவுலஞ்சம் வாங்கினால் அதையெல்லாம் ஏன் கின்னஸ்ல போடறதில்லை?''

''அச்சாகறதுக்குள் ஒருத்தரோட சாத னையை இன்னொருத்தர் முறியடிச்சுக் கிட்டே இருப்பாங்கன்னு பயந்து தான்!''

— சீர்காழி வி. ரேவதி.

---

பையினுள் செலுத்தி விட வேண்டும். அதன் பின்பு மற்ற சாதாரண குழந்தையைப் போன்றே அது வளர்ந்து ஒன்பது மாதம் கழிந்து குழந்தையாய் வெளிவரும்...''

''சாத்தியமா?''

''நிகழ்கால விஞ்ஞானத்தில் எதுவும் சாத் தியம்,'' என்றார் அலக்ஸ். ''என் ஆராய்ச்சி கள் இன்னும் ஒரு படி மேலே. பெண் முட்டையிலிருந்து இருபத்தி மூன்று குரோமோசோம்களை எடுத்த பின்பு, ஒரு ஹார்மோனை அதனுள் செலுத்தி, அதன் பின்பு உடல் செல்லின் குரோமோசோம் களை உட்செலுத்தினால் உருவாகும் குளோன் இன்னும் விசேஷமானவன்..''

''எப்படி?''

''உடல் மட்டுமல்லாது உணர்ச்சிகள், நினைவுகள் கூட கார்பன் காப்பியாய் இருக் கும். இம்முறையில் உங்கள் குளோன் இன்று உருவாக்கப்பட்டதாய் வைத்துக் கொள் வோம். உங்களின் மூளையில் இதுவரை என்னென்ன செய்திகள், என்னென்ன எண்ணங்கள் பதிவாகி இருக்கின்றனவோ, அவை உங்கள் குளோனின் மூளையிலும் பதிவாகி இருக்கும். உதாரணத்திற்கு, அந்தக் குளோனின் மூளையில 'நாட்டின் அதிபர் நான்' என்கிற விஷயம் பதிவாகி இருக்கும். அந்தக் குளோன் வளர்ந்து விவரம் அறியும் பருவத்திற்கு வரும் போது பதிந்திருக்கும் செய்திகளெல்லாம் டிகோட் (decode) ஆகிச் செயல்பாட்டிற்கு வந்து விடும்...''

''கற்பனைக் கெட்டாத அற்புதம்,'' என்றார் அதிபர். ''அதாவது நான் மரண மடைந்த பின்பு கூட நானே இந்த நாட்டை ஆள முடியும்..''

''எக்ஸாக்ட்லி...''

''எனக்கு என்னுடைய குளோன் வேண் டும்,'' என்றார் அதிபர். அலக்ஸ் அதிர்ந் தார். ''சாத்தியம் என்கிறபோதிலும் சொல் லும் அளவிற்கு இது சுலபமானதல்ல... கோடிக்கணக்காய்ப் பணம் வேண்டும். மேலும்...''

''நோ...'' என்றார் அதிபர். ''பணம் பெரிதல்ல. நான் இந் நாட்டின் அதிபர். அதிபதி...''

அலக்ஸுக்குச் சந்தோஷம் வந்தது. 'விலங்குகளில் முயற்சி செய்ததை மனித னில் முயற்சி செய்ய ஒரு சந்தர்ப்பம். என் விஞ்ஞானப் பசிக்குத் தீனி.'

''இதற்கு வெகு நாட்கள், ஏன், பல வருஷங்கள் கூட ஆகலாம்,'' என்றார் அலக்ஸ் தயங்கி.

''பரவாயில்லை'' என்றார் அதிபர். ''இடையிலேயே என் ஆட்சி கவிழ்ந்து விட்டால் என்ன செய்வது என்று எண்ணு கிறீரா? நடக்காது. இந்த முட்டாள் செம்மறி யாட்டுக் கூட்டத்தை ஆள்வது சுலபம். என் குளோன் உருவாகட்டும்... நீர் தக்க முறையில் கௌரவிக்கப்படுவீர்...''

''சரி...'' என்றார் அலக்ஸ். ''என் திட்டத்தை முழுமையாய்த் தயாரித்த பின் உங்களைத் தொடர்பு கொள்கிறேன்...''

வெளியே வந்தார்கள். போகும் முன் ஷர்லியைத் தொட்டு, ''உன் இளமையும், அழகும் இந் நாட்டிற்குப் பயன்படட்டும்,'' என்றார் அதிபர்.

அதிபர் போன பின், ஷர்லியிடம், ''இவன் இங்கு இனி அடிக்கடி வர நேரிடும். இவன் கண்ணில் படாதிரு,'' என்றார் டாக்டர் அலக்ஸ்.

செயல் திட்டத்தைத் தெளிவாய், விரி வாய்த் தயாரித்தார் டாக்டர் அலக்ஸ். முதல் ஸ்டேஜ், பெண் முட்டையினைப் பெறுவது. இரண்டாவது, அதில் உள்ள குரோமோ சோம்களை நீக்குவது. மூன்றாவது நிலை, அதிபரிடம் இருந்து 'உடல் செல்'லைப் பெறுவது. அடுத்தது, உடல் செல்லின் குரோமோசோம்களை எடுத்துக் காலியாய் இருக்கும் பெண் முட்டைக்குள் செலுத்து வது. ஐந்தாவது குறிப்பிட்ட ஸ்டேஜ் வரை கருவை டெஸ்ட் ட்யூபில் வளர்ப்பது, ஆறாவது நிலை, அந்த டெஸ்ட் ட்யூப் கருவைத் 'தயார் செய்யப்பட்ட' ஒரு (பெண்ணின்) கர்ப்பப் பையில் செலுத்து வது.

''இதில் முதல் நிலைக்கும், ஆறாம் நிலைக்கும் ஏராளமான பெண்கள் — அதுவும் நூற்றுக்கணக்கில் — தேவைப்படு வார்களே...'' என்றாள் ஷர்லி. ''உத்தேச மாய் ஒரு பெண்ணில் மாதம் ஒருமுறைதான் ஒரு 'முட்டை' வளர்ச்சியடைகிறது. முட்டை செல்லை வெளியே எடுக்கும் முயற்சியில், எடுத்த பின் உட்கருவை நீக்கும் முயற்சியில், உடல் செல்லின் குரோமோ சோமை உட்செலுத்தும் முயற்சியில் ஏராள மாய் முட்டை வீணாகுமே...''

''அதைச் சமாளிக்கக் 'கொல்லைப் புற வழிகள்' வைத்திருக்கிறேன்,'' என்றார் அலக்ஸ்.

''என்ன?''

''நகரில் கருத்தடை ஆபரேஷன்கள் நம் ஆராய்ச்சி நிலையத்தில் மட்டுந்தான் நடத்தப்பட வேண்டும் என்று அதிபர் மூலம்

சட்டம் போடச் சொல்லப் போகிறேன்.''
''சட்டம் போட்டு...?''
''கர்ப்பத் தடை ஆபரேஷன்களுக்காக வரும் பெண்களுக்கு அவர்களுக்குத் தெரியாமலேயே ஹார்மோன்களைத் தந்து, முட்டையை வளர்ச்சியடையச் செய்வோம். ஆபரேஷன் செய்யும் போது முட்டையை எடுத்துக் கொள்வோம்...''
''இது நியாயமே இல்லை ஸார். மருத்துவ தர்மத்தையே மீறச் சொல்கிறீர்களே...'' என்றாள் ஷர்லி.
''இதோ பார் ஷர்லி. பொதுவான நியதிகள் விஞ்ஞானத்திற்கும், போருக்கும் பொருந்தாது என்று சமாதானமடைய வேண்டியதுதான். ஏனெனில் நாம் அதிபரின் கட்டளையை மீற முடியாது. இப்போது சொல்வது போல் செய்...''
''சரி...'' என்றாள் பெருமூச்சுடன். ''குழந்தையைச் சுமக்க எப்படிப் பெண்களைப் பெறுவீர்கள்?''
''ஸிம்பிள். குழந்தை இல்லாத தம்பதிகளுக்குக் குழந்தை பெற்றுத் தருவது என்கிற மாதிரி 'மலட்டுத் தன்மை நீக்கும் பகுதி' ஒன்று நம் ஆ ரா ய் ச் சி நிலையத்தில் தொடங்கப்படும். மிகச் சிறப்பாக அதிபர் மூலம் விளம்பரம் செய்யச் சொல்வோம். குழந்தை வேண்டி வருகிற பெண்களின் கர்ப்பப் பையில் அவர்களுக்குத் தெரியாமலேயே கர்ப்பப் பையைத் தயார்ப்படுத்திக் கருவைச் செலுத்தி முயற்சி செய்ய வேண்டியதுதான்...''

**ச**ட்டம் இயற்றப்பட்டது. விளம்பரப் படுத்தப்பட்டது.
''ஐந்து ஆண்டுகள் முடிந்து விட்டன,'' என்றார் அதிபர் பொறுமை இழந்தவராய். ''என்னிடம் இருந்து நூறு தடவைக்கு மேல் செல் பிரித்து எடுத்து விட்டீர்.''
''தாமதம் தவிர்க்க முடியாதது என்று ஆரம்பத்திலேயே சொன்னேன்,'' என்றார் டாக்டர். ''நிகழ்காலத்தில் போருக்கு வெற்றி என்று ஒன்று இல்லை. அது போல் விஞ்ஞானத்துக்குத் தோல்வி என்று ஒன்று இல்லை..''

''**டா**க்டர், நாம் நம் ஆராய்ச்சியின் இறுதி நிலைக்கு வந்து விட்டோம் என்று நினைக்கிறேன்,'' என்றாள் ஷர்லி. ''உட் செலுத்தப்பட்ட கருவை ஜெனிஃபரின் கர்ப்பப் பை ஏற்றுக் கொண்டு விட்டது.''
''ஹுர்ரா...'' என்று அவளை முத்தமிட்டார். ''ஜெனிஃபர் பிரசவம் வரை இங்கேயே இருக்கட்டும். பிரசவம் முடிந்ததும் குழந்தை இறந்து விட்டதாய் அவளிடம் சொல்லி அவளை அனுப்பி விடு.''

**கு**ளோன் பிறந்தான். ஜெனிஃபர் ஏமாற்றப்பட்டாள். அலெக்ஸ் சந்தோஷ அவசரத்துடன் அதிபருக்கு ஃபோன் பண்ணினார். ''உங்கள் குளோன் பிறந்து விட்டான். முடிந்தால் நீங்கள் பிறந்த போது எடுத்த ஃபோட்டோக்கள் இருந்தால் எடுத்து வாருங்கள்.''
எடுத்து வந்திருந்தார். ''வாவ்...'' என்றார். ஃபோட்டோவையும் குளோனையும் மாறி மாறிப் பார்த்தார். ஒரே அச்சாக.
''குழந்தையை எடுத்துச் செல்கிறேன்'' என்றார் அதிபர். ''விவரம் அறியும் பருவம் வரும் வரை, குழந்தை என்னிடமே வளரட்டும்,'' என்றார் அலக்ஸ். ''அப்போதுதான் உங்கள் மூளையின் செய்திகள் இந்த குளோனின் மூளையில் பதிந்திருக்கின்றனவா என அறிய இயலும்...''
''ஸோ...?''
''இன்னும் சில வருஷங்கள் காத்திருக்க வேண்டும்.''

**கா**த்திருந்தார்.
''நீங்கள் காத்திருந்தது வீணில்லை. நீங்களே சோதித்துக் கொள்ளுங்கள்,'' என்று அகன்றார் அலக்ஸ்.
அதிபர் முன் அவர் குளோன் நின்றிருந்தான்.
''நீ யார்?'' என்றார் அதிபர்.
''இந் நாட்டின் அதிபர்'' என்றான் குழந்தை.
''அரசாங்கக் காரியத்திற்காக உபயோகப் படுத்தும் காரின் எண்...?''
சொன்னான்.
''ஸ்விஸ் பேங்க் அக்கவுண்டின் எண்...?''
சொன்னான்.
''ஒண்டர்ஃபுல்...'' என்றார் அதிபர். அலக்ஸை அழைத்து, ''குழந்தையை அழைத்துச் செல்கிறேன்,'' என்றார். ''நீர் தக்க முறையில் கௌரவிக்கப்படுவீர்.'' விடை பெற்று வெளியே வந்தார்.
ஹெலிகாப்டரில் ஏறியதும், ''நாளை விடியும் போது இந்த டாக்டர் அலக்ஸ், இந்த கட்டடம், இதிலுள்ள நபர்கள், உயிர்கள் யாரும் உயிரோடு இருக்கக் கூடாது..'' என்றார் மெய்க்காவலனிடம்.

**மா**ளிகைக்கு வந்ததும் தன் மனைவியைக் குழந்தைக்கு அறிமுகப்படுத்தினார். ''இனி இவள்தான் உன் தாய்...'' என்றார்.
''என்ன?'' என்றான் குழந்தை. ''இவள் என் மனைவி அல்லவா?''



# ஓர் ஆபரேஷனின் வெற்றிக்கு டாக்டர் மட்டுமே காரணமல்ல!

"பெரும்பாலும் ஓர் ஆபரேஷனின் வெற்றிக்கு அதைச் செய்யும் டாக்டர்தான் காரணம் என்று பலரும் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். உண்மையில் அப்படியில்லை. டாக்டர் என்பவர் ஒரு கையிலுள்ள பெருவிரலைப் போன்றவர் என்றால், மற்ற நான்கு விரல்களாக இருந்து ஒத்துழைப்பவர்கள் அனஸ்தடிஸ்ட், நர்ஸ்கள், ஆபரேஷன் தியேட்டர் டெக்னீஷியன்கள், பையன்கள். இவர்களில் ஒருவர் ஏனோதானோ வென்று இருந்து விட்டால் கூட செய்யப்படும் ஆபரேஷன் வெற்றியடையாமல் போய் விடும்!'' என்கிறார் அப்போலோவில் பணிபுரியும் டாக்டர் கோபாலகிருஷ்ணன்.

''ஒருவருக்கு ஆபரேஷன் செய்வதற்காக என்னென்ன முன்னேற்பாடுகளைச் செய்வீர்கள்?''

''இத்தனாவது பெட்டிலுள்ள நோயாளிக்கு இன்ன நாளில் இன்ன ஆபரேஷன் என்று சொல்வதோடு என்னைப் போன்ற டாக்டரின் வேலை முடிந்தது. பிறகு அந்த நாளில் நான் ஆபரேஷன் தியேட்டருக்குச் செல்வதோடு சரி. இதற்கிடையில் நடக்கும் வேலைகளை நான் விவரிக்கிறேன்.

''இன்ன நோயாளிக்கு இன்ன ஆபரேஷன் என்றதும் அந்த நோயாளியின் பொதுப்படையான உடல்நலத்தை ஆராய்வார் அனஸ்திடிஸ்ட். (இவரும் அனஸ்தீஸியா துறையில் எம். டி. படித்த டாக்டர்தான்) உதாரணமாக அந்த நோயாளிக்கு இரத்த அழுத்தம் இருக்கிறதா? அண்மையில் அவருக்கு மஞ்சள் காமாலை போன்ற நோய்கள் ஏதேனும் வந்திருக்கின்றனவா? அப்படி வந்திருந்தால் எந்தெந்த மருந்துகளைக் கொடுக்கலாம் அல்லது கொடுக்கக் கூடாது என்பது போன்ற பொதுவான விஷயங்களை அவர் ஆராய்ந்து அதற்கேற்ற மருந்துகளையும், உபகரணங்களையும் தயார் செய்யும்படி நர்ஸ்களிடம் சொல்லுவார்.

''ஆபரேஷன் தியேட்டரில் இரண்டு நர்ஸ்கள் இருப்பார்கள். ஒருவர் ஸ்கர்ப் நர்ஸ் என்றும் மற்றவர் ப்ளோர் நர்ஸ் என்றும் சொல்வார்கள். ஸ்கர்ப் நர்ஸாக இருப்பவர் எல்லா மருந்துகளையும் தயார் நிலையில் வைத்திருப்பார். ப்ளோர் நர்ஸாக இருப்பவர் ஆபரேஷனுக்குத் தேவையான உபகரணங்களைத் தயார் நிலையில் வைத்திருப்பார். அதாவது ஸ்கர்ப் நர்ஸுக்குப் ப்ளோர் நர்ஸ் உதவியாக இருப்பார்.

''அடுத்ததாக ஆபரேஷன் தியேட்டர் டெக்னீஷியன்கள். இவர்கள்தான் அங்குள்ள ஆக்ஸிஜன் சிலிண்டர்கள், லைட்டுகள், ஏர்கண்டிஷனர், மற்ற மெஷின்களெல்லாம் சரியாக இருக்கின்றனவா என்பதைச் சரி பார்த்துத் தயாராய் வைத்திருப்பார்கள். அதோடு ஆபரேஷன் தியேட்டருக்கும் மற்ற அறைகளுக்கும் இடைப்பட்டு ஓர் இடம் இருக்கும். இந்த இடத்தில்தான் தியேட்டருக்குள் செல்லும் டாக்டர்களும் மற்றவர்களும்



* டாக்டர் கோபாலகிருஷ்ணன்

ஸ்டெரிலைஸ் செய்யப்பட்ட ஆடைகளை அணிந்து கொள்வார்கள். அப்படியும் நம்முடைய உடம்பின் மேல் ஏதாவது நுண்ணுயிர்கள் ஒட்டிக் கொண்டு சென்று விடலாமல்லவா! அப்படி ஏதாவது ஒட்டிக் கொண்டு சென்று விட்டால் கூட ஆபரேஷன் செய்யப்படும் போது. அது நோயாளியின் உடம்புக்குள் புகுந்து ஆபத்தை விளைவித்து விடுமே! அதற்காகத் தியேட்டருக்குள் நுழையும் போது, மேற்கூரையிலிருந்து அல்ட்ரா வயலட் கதிர்கள் நம் மேல் படும்படி அமைக்கப்பட்டிருக்கும். அந்தக் கதிர்கள் நம் உடலில் பட்டு, ஏதேனும் கிருமிகள் இருந்தால் கொன்று விடும். அந்தக் கதிர்கள் ஒழுங்காக விழுகின்றனவா என்பதையும் டெக்னீஷியன்கள்

* அப்போலோ மருத்துவமனை ஆபரேஷ. தியேட்டர் ஒன்றில்...

கவனித்துக் கொள்ள வேண்டும்.

''அடுத்தது பையன்கள். இவர்களை ஆபரேஷன் தியேட்டர் பாய்ஸ், ஸ்ட்ரச்சர் பாய்ஸ் என்று இரு வகையாகப் பிரிக்கலாம். ஆபரேஷன் தியேட்டர் பாய்ஸ்தான் தியேட்டரைச் சுத்தமாக வைத்துக் கொள்வார்கள். அதற்காக ஒவ்வொரு வாரமும் ஃபார்மாலின் காஸ் (இதைப் போடும் போது ஏராளமான கண் எரிச்சலைத் தரும். அதைப் பொருட்படுத்தாமல் போடுவார்கள் இவர்கள்) போட்டுத் தியேட்டரை ஸ்டெரிலைஸ் பண்ணுவார்கள். ஒவ்வொரு ஆபரேஷனுக்குப் பிறகு தியேட்டரைச் சுத்தப்படுத்துவதும், ஆபரேஷன் தியேட்டருக்குள் நுழையும் போது நோயாளிக்கு, அதற்கான டிரஸ் போட்டு விடுவதும் இவர்கள்தான்.

''அப்புறம் ஸ்ட்ரெச்சர் பாய்ஸ். இவர்கள்தான் குறிப்பிட்ட பெட்டிலிருக்கும் நோயாளியைக் குறிப்பிட்ட நேரத்திற்கு ஆபரேஷன் தியேட்டர் வரை கொண்டு வந்து தியேட்டர் பாய்ஸிடம் ஒப்படைப்பவர்கள். இவர்கள் தவறு செய்தால் நோயாளிகளே மாறிப் போய் விடும் அபாயம் இருக்கிறது என்பதால் இவர்களும் மிக மிக கவனமாக இருக்க வேண்டும்.

''இத்தனை ஏற்பாடுகளும் தயாராய் இருக்க, நோயாளியும் தியேட்டருக்குள் கொண்டு செல்லப்பட்டு விட்ட நிலையில் தான் அறுவைச் சிகிச்சை செய்யும் டாக்டர் உள்ளே நுழைவார். எந்த டாக்டர் தமக்கு அறுவைச் சிகிச்சை செய்ய வேண்டுமென்று நோயாளி விரும்பி வந்தாரோ அந்த டாக்டர் தியேட்டருக்குள் நுழைந்து நோயாளியைப் பார்த்து உறுதி செய்த பிறகுதான் — நோயாளியும் அந்த டாக்டரைப் பார்த்த பிறகுதான் — நோயாளிக்கு அனஸ்திடிஸ்ட் மயக்க மருந்தைக் கொடுப்பார். அதன் பிறகு ஆபரேஷன் துவங்கும்.

''ஆபரேஷன் நடக்கும் போது டாக்டருக்கு ஸ்கரப் நர்ஸ் உதவி செய்வா[illegible] அவருக்கு ஃப்ளோர் நர்ஸ் உதவுவா[illegible] ஆபரேஷன் முடிந்து, மீண்டும் தைய[illegible] போடும் போது, அந்த ஆபரேஷனுக்[illegible] எத்தனை உபகரணங்கள் பயன்படுத்த[illegible] பட்டன. அவையெல்லாம் மீண்டும் சரியா[illegible] இருக்கின்றனவா (நோயாளியின் உடலு[illegible] குள்ளேயே தங்கி விடக் கூடாதே!) என[illegible] பதைக் கடைசியில் ஃப்ளோர் நர்ஸ் ச[illegible] பார்த்து ஓகே செய்த பிறகுதான் டாக்ட[illegible] தையலை முடிப்பார்!

''ஆக, இத்தனை பேருடைய ஒத்துழைப்பும் மயிரிழை பிசகாமல் கிடைக்கும் போது தான், ஓர் அறுவைச் சிகிச்சை நிபுணரின் ஆபரேஷன் வெற்றியடைகிறது!'' என்றார் டாக்டர் கோபாலகிருஷ்ணன்.

— பிரின்ஸ்

# இது ஆபரேஷன் தியேட்டரல்ல; ஆம்புலன்ஸ்!




ஓர் ஆம்புலன்ஸ் என்பது எப்படியிருக்கும்? ஒரு வேன்; அதற்குள் நோயாளியையோ அல்லது விபத்துக்குள்ளான ஒருவரையோ படுக்க வைப்பதற்கான ஒரு படுக்கை இருக்கும் என்றுதானே நம்மில் பலரும் நினைத்துக் கொண்டிருக்கிறோம். அதுதான் இல்லை!

அப்போலோ மருத்துவமனை ஆம்புலன்ஸ்களைப் பார்த்தால் பிரமிப்பாக இருக்கிறது. குளிர்பதன வசதி செய்யப்பட்ட வேனுக்குள் இருக்கும் படுக்கையைத் தேவைக்குத் தகுந்தபடி நகர்த்திக் கொள்ளும் வசதி, உயிர்காக்கும் மருந்துகள், ஆக்ஸிஜன் சிலிண்டர்கள், இ. ஸி. ஜி. வசதிகள் என்று ஓர் எமர்ஜென்ஸி வார்டில் உள்ள அத்தனை வசதிகளும் இருக்கின்றன. தேவைக்குத் தகுந்தபடி சம்பந்தப்பட்ட டாக்டரும் ஆம்புலன்ஸில் செல்கிறார்.

இவற்றோடு, ''சாலை விபத்து போன்ற விபத்துக்களில் சிக்கும் யாருக்கும் அப்போலோ மருத்துவமனையில் ஐநூறு ரூபாய் வரைக்கான அவசரச் சிகிச்சையை இலவசமாகவே செய்து அனுப்புகிறோம்!'' என்றார்கள், அப்போலோ ஆம்புலன்ஸ் பிரிவின் டாக்டர்களான கேப்பா பால்ராஜும் உதயகுமார் பாலகிருஷ்ணாவும்.

# ஒரு போஸ்ட் கார்டு போதும்!...









மேலும் ஆங்கிலத்தில் பேச
வேண்டும் என்ற எனது நீண்ட
நாளைய விருப்பம் உங்களது
பயிற்சியின் மூலம் நிறைவேறும்
என நம்புகிறேன். எனவே
முன் சொன்ன எனது முகவரிக்கு
இப்பயிற்சி பற்றிய தகவல்
புத்தகத்தையும், விண்ணப்ப
மனுவையும் அனுப்புமாறு
வேண்டுகிறேன்.
இப்படிக்கு,

விவேகானந்தா கல்வி நிலையம்,
தபால் பெட்டி எண்: 4986,
9. நடேசன் தெரு,
சென்னை - 600017.

உங்களுக்கும், உங்களது முன்னேற்றத்திற்கும் இடையில் இப்பொழுது உள்ள தூரம் ஒரு போஸ்ட் கார்டுதான் என்று நாங்கள் கூறினால், அது சற்று மிகையாகத் தோன்றும். ஆனால் உண்மை அதுதான்.

★ மற்றவர்கள் ஆங்கிலத்தில் பேசுவதை ஓரளவு புரிந்து கொள்ள முடிகிறது. ஆனால், ஆங்கிலத்தில் பேசினால் ஏதாவது தவறாகப் பேசிவிடுவோமோ என்ற தயக்கம் உங்களிடம் குடிகொண்டிருந்தால்....

★ பல வழிகளில் முயன்றும், பல புத்தகங்களைப் படித்தும் ஆங்கிலத்தில் சரளமாகப் பேச முடியவில்லையே என்ற சலிப்பு உங்களுக்கு ஏற்பட்டிருந்தால்....

நீங்கள் எதிர்பார்க்கும் முன்னேற்றத்தை இப்பொழுது அடைய ஒரே ஒரு போஸ்ட் கார்டு போதும். ஆமாம்!

ஒரு போஸ்ட் கார்டில் "நான் விவேகானந்தா கல்வி நிலையத்தில் ஆங்கிலம் கற்க விரும்புகிறேன்" என்று எழுதி, கீழ்கண்ட முகவரிக்கு உடனே அனுப்பி வைத்தால் போதும்.

நீங்கள் மேற்கொள்ள வேண்டிய பயிற்சி பற்றிய விபரங்களை உடனே உங்களுக்கு அனுப்புகிறோம்.

வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரத்தில் தபால் மூலம் இப்பயிற்சியினை நீங்கள் மேற்கொள்ளலாம்.

ஆங்கிலத்தில் சரளமாகப் பேச வேண்டும், இலக்கணப் பிழையின்றி கடிதங்கள், கட்டுரைகள் எழுத வேண்டும் என்ற உங்களது நீண்ட நாளைய விருப்பம் இப்பயிற்சியின் மூலம் நிச்சயம் நிறைவேறும். என்ன? எங்கே கிளம்பி விட்டீர்கள்?

போஸ்ட் கார்டு வாங்கத்தானே?

அப்படியானால் உங்களது முன்னேற்றத்தின் முதல் முயற்சி துவங்கி விட்டது!

நேர்முகப் பயிற்சியும் உண்டு ☎ 44 12 16

## விவேகானந்தா கல்வி நிலையம்

தபால் பெட்டி எண்:4986, 9.நடேசன் தெரு, தி.நகர், சென்னை-17.

NAGA

# அந்தக் காலத்தில் மருத்துவம்!



● மருத்துவமனைகளை முதன் முதலில் உருவாக்கியவர்கள் யார் தெரியுமோ? கிரேக்கர்கள். இவற்றை வழிபாட்டுத் தலங்கள் அருகே கட்டினார்கள். பூசாரியும், அவரது உதவியாளர்களும் நோயுற்றவரைப் பார்த்துக் கொள்ள இது வசதியாக இருந்ததாம்.

● ஒருவருடைய ஆரோக்கியத்துக்கு உடற்பயிற்சி அவசியமானது என்று கிரேக்கர்கள் கருதினார்கள். விளையாட்டுத் திடல்களையும், ஓட்டப் பயிற்சிக்கான தடகளங்களையும் உருவாக்கினார்கள். ரோமானியர்கள், கிரேக்கர்களிடமிருந்து அப்படியே இந்த மருத்துவமனை ஐடியாவை எடுத்துக் கொண்டிருக்கிறார்கள்.

● நோயாளிகளைக் கவனித்துக் கொள்ள மேற்கு ஐரோப்பாவில் வசதிகள் தோன்று முன்னரே, அராபியர்கள் மருத்துவமனையை நிறுவி விட்டார்களாம். ஐரோப்பாவில் அறியப்படாத வைத்திய முறைகள், இந்த மருத்துவமனைகளில் கையாளப்பட்டன. எலும்பு முறிவுகளுக்கு, அவை இணைந்து குணமாக, மாவு போடும் முறை அவர்கள் தொடங்கியதுதானாம்.

● ஐரோப்பிய மருத்துவமனைகள் முதலில் கன்னிகா ஸ்த்ரீகளாலும், துறவிகளாலும்தான் நடத்தப்பட்டன. ஏனென்றால் மக்களைக் காப்பதை, மதங்கள் விதித்த கடமையாக அவர்கள் நினைத்தார்கள்.

● இந்த ஆதி காலத்து ஆஸ்பத்திரிகளில் குணமாக்குவது என்பது முக்கியமாகக் கருதப்படவில்லை. அவர்களைப் பரிவுடன் கவனித்துக் கொள்வது என்பதற்கே முக்கியத்துவம் கொடுத்தார்கள் — அவர்களைச் சுத்தம் செய்வது, அவர்களுக்கு உணவு கொடுப்பது, ஆறுதல் சொல்லித் தேற்றுவது என்று. மருந்துகளைச் செய்ய, மருத்துவர்கள் அப்போது மூலிகைகளைப் பயன்படுத்தினார்கள். தங்கள் நோயாளிகளைக் குணப்படுத்த, நேரம் குறித்து, நட்சத்திரங்கள் கூடப் பார்ப்பார்களாம்!

● முதன் முதலாக, வைத்தியம் செய்பவரை டாக்டர் என்று அழைக்கும் பழக்கம் 900 ஆண்டுகளுக்கு முன்தான் வந்தது. இதாலியில் சாலேர்னோ பல்கலைக் கழகத்தில் மருத்துவம் போதித்தார்கள், மாணவர்கள் கற்றது என்ன என்பதைப் பரிசோதிப்பார்கள். பிறகு அவர்களுக்கு 'டாக்டர் அஃப் மெடிசின்' பட்டம் வழங்கப்படும்.

● சுமார் 500 வருடங்களுக்கு முன்புதான் மருத்துவக் கல்வி அளிக்கப் பல கல்லூரிகள் தொடங்கப்பட்டன. அவற்றில் மிகப் பழையது, பிரிட்டனில் உள்ள ராயல் காலேஜ் அஃப் பிஸிஷன்ஸ். லண்டனில் 1518ல் இது துவக்கப்பட்டது.

● முன் காலத்தில் கூர்மையான கல்லால், கபாலத்தில் ஒரு துளையிட்டு, வலியைப் போக்கவும், 'சேட்டை செய்யும் பிசாசு'களை விரட்டவும் செய்வார்களாம். இதற்குப் பிறகும் அவர்கள் வாழ்ந்ததாகத் தெரிகிறது. ஏனென்றால் அந்தத் துளை அடைபட்ட அடையாளம் தெரிகிறதாம், கிடைத்த மண்டை ஓடுகளில்.

● சிகையலங்காரக் கடைகள் வாசலில் சிவப்பும், வெள்ளையுமாக வர்ணம் அடித்த மூங்கில் கம்பு நடப்பட்டிருந்தால், அங்கே வைத்தியமும் பார்க்கப்படும்; பல்லைக் கூடப் பிடுங்குவாராம் சிகைக் கலைஞர்!

● 1928ல் 'பறக்கும் டாக்டர் சர்வீஸ்' ஆஸ்திரேலியாவில் ஆரம்பிக்கப்பட்டது. இந்த விமானம் ஒரு குட்டி ஆஸ்பத்திரி மாதிரி இருக்குமாம். நகரங்களை விட்டுத் தள்ளியிருக்கும் நோயாளிகளுக்கு உதவவே இந்த சர்வீஸ்.

**FAMILY HEALTH GUIDE** என்ற நூலிலிருந்து.

தொகுப்பு: **எஸ். வி. என்.**

பி.கு.: டாக்டரும், நோயாளியும், நோயும்; சிகரெட் — குடி கெடுதல்கள்; நீரிழிவு நோய்; பிரசவத்துக்கு முன்பும் பின்பும் எக்சர்சைஸ்கள் என்று ஏராளத் தகவல்கள் தரும் கட்டுரைகள் உள்ள இந் நூலை, சென்னை அப்போலோ மருத்துவமனை வெளியிட்டிருக்கிறது. விலை இருபது ரூபாய்.

# உல்லாசமாய்க் கொண்டாடுங்கள் ஓய்வு பெறுவதை!

## எல்ஐசியின் ஜீவன் அக்ஷய்

### ஓய்வு காலத்தில் சேமிப்பை மாதாந்திர வருவாயாக்கும்— ஆயுட்காலம் முழுவதற்கும்.

ஜீவன் அக்ஷய் – 50 வயதோ அதற்கு மேலோ உள்ள எவருக்கும் நன் விரும்பத் தேவைக்குரிய ஒரு ஒப்பற்ற ஓய்வு – ஊதியத் திட்டமாகும். அவர்களுடைய வாழ்நாள் சேமிப்பை, அவர்கள் ஆயுட்காலம் முழுதும் உதவிட வைக்கும். பிராவிடெண்ட் நிதி, பணிக்கொடை (கிராஜுட்டி) போன்ற ஓய்வுகால பலன் தொகைகள் ஜீவன் அக்ஷயில் முதலீடு செய்யப்பட்டால், செலவழியாமல் பத்திரமாயிருந்து மாதாந்திர வருவாயாகக் கிடைப்பது உறுதி.

ஜீவன் அக்ஷய் தரும் நற்பயன்களைப் பாருங்கள்:

- பின் தேதியிட்ட 12 செக்குகள் (ஒவ்வொரு மாதத்திற்கும் உரியது) ஆண்டு முழுமைக்கும் முன்னமேயே கிடைத்திடும். இது (வாழ்க்கைக்கு) ஒவ்வொரு ஆண்டும் உங்கள் முதலீட்டின் 12.7 சதவிகித அளவாகும்.
- ஆண்டுக்கு 40,000 ரூபாய் வரை கட்டப்படும் பிரிமியங்கள் வருமான வரிச் சட்டத்தின் 80 சிசிசி — பிரிவின் கீழ், வருமான வரி விதிப்புக்கு உட்பட்ட வருமானத்திலிருந்து 100 சதவிகிதம் வரிவிலக்கு உரிமை பெறும்.
- போனஸும் முதலோடு சேர்த்துத் தரப்படும் — பாலிசிதாரரின் இறப்புக்கு பிறகு சட்டப்படியான வாரிசுகளுக்கு.
- சேமிக்கத் தொடங்கி 7 ஆண்டுகளுக்கு பிறகு (சிறிதே குறையும் மாத வருமானத்தோடு) முதல் தொகையில் 30 சதவிகிதம் திரும்பப் பெறும் விருப்பத் தேர்வுரிமை.

*இலவசப் பிரசுரம் மற்றும் விபரங்கள் பெற அருகிலுள்ள எல்ஐசி அலுவலகத்தோடு, அல்லது எந்த ஒரு எல்ஐசி ஏஜெண்டோடு, அல்லது டெவலப்மெண்ட் ஆஃபிஸரோடு தொடர்பு கொள்க. இனிதே உதவி கிடைத்திடும்.*



**லைஃப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பரேஷன் ஆஃப் இந்தியா**

CLARION-C-LIC-12-TML

10

"நீ எடுத்திருக்கிறது சரியான முடிவுன்னு நீ நெனைக்கிறியா?'' என்றான் ரகு.

''எடுத்தப்புறம் யோசிக்கிறது தப்பு'' என்றான் துருவ்.

''அந்தப் பெண்ணைக் கல்யாணம் பண்ணிக்கிறதினாலே உங்க தாம்பத்ய வாழ்க்கை சந்தோஷமா இருக்கும்னு நீ நெனைக்கிறியா?''

''இதனாலே ஏற்படற சந்தோஷம் ஒரு அல்பமான விஷயம்.''

''இது உன்னைப் பொறுத்தவரையில். ஆனா அந்தப் பொண்ணோட வாழ்க்கை?''

துருவ் பதில் கூறவில்லை.

''சொல்றேன் கேளு... சந்தியாதான் உனக்கு ஏத்தவ... இந்தப் பொண்ணு. பாவம், ப்ளீஸ் லீவ் ஹர் அலோன்.''

# ஆகாசத் தாமரை

துருவ் எழுந்து பால்கனியில் போய் நின்றான். அவன் தாடை இறுகியிருந்தது.

அவனைத் தொடர்ந்து வந்த ரகு, ''துருவ், டெல் மீ, எதுக்காக இந்த மாதிரி ஒரு முடிவு எடுத்திருக்கே, சொல்லு... படிப்பில்லாத மிகச் சாதாரணமான ஒரு பொண்ணை நீ விரும்பறதாச் சொல்றியே, இது உன் காரெக்டருக்கே விரோதமா இருக்கே, 'ஐ காண்ட் பிலீவ் இட்!'' என்றான் ரகு அவன் தோளைத் தொட்டுக் கொண்டே.

''நான் விரும்பறதாச் சொல்லலியே...''

''தென் வாட்?''

''கல்யாணம் பண்ணிக்கப் போறேன். இதுக்கு என்ன காரணம்னு எனக்கே தெரியாது. அவளுக்கு ஒண்ணுமே தெரியாது. வாஸ்தவந்தான். ஸிம்பிள், எதிலே அவளுக்கு ஈடுபாடு உண்டுன்னு தெரிஞ்சுக்க அவளுக்கு இதுவரை வாய்ப்புக் கொடுக்கப்படவேயில்லே. பட்சணம் செய்து விற்கிறவரோட பொண்ணு. பட்... என்னோட மனைவி ஆனப்புறம், ஷி மே சேஞ்ச்... ஆனா அப்படி மாறணும்னு நான் வற்புறுத்தவும் மாட்டேன்.'

''எப்படி மாறணும்னு?''

''மியூஸிக்லே இன்ட்ரெஸ்ட் ஏற்பட்டு, என்னை ரசிக்கலாம். அவளே வீணை வாசிக்க ஆரம்பிக்கலாம். அல்லது, என்னையும் என் மியூஸிக்கையும் அவள் வெறுக்க ஆரம்பிக்கலாம்... நான் எதுக்கும் தயார்.''

''இட் ஈஸ் எ கேம்பிள், இல்லையா?''

''எஸ் இட் ஈஸ். இந்த கேம்பிள்தான் ஒரு சுவாரஸ்யமான விஷயம்.''

''சந்தியா பேரிலே உள்ள கோபத்திலே இப்படிச் செய்யறேன்னு நான் நெனைக்கிறேன்.''

துருவ், முகம் சிவக்க, அவனைப் பார்த்தான்.

''என் கோபத்துக்குத் தகுதியான ஆள் யாரும் இந்த உலகத்திலேயே கிடையாது, தெரியுமா உனக்கு?''

''உன் கோபத்துக்குத் தகுதியான ஆள் நீயேதான். அதனால்தான் உன் பேரிலேயே நீ உன் கோபத்தை இப்படிக் காட்டிண்டிருக்கே.''

''எப்படி?''

''உனக்கும், நீ கல்யாணம் பண்ணிக்கப் போறதாச் சொல்லிண்டிருக்கிற பெண்ணுக்கும் எந்தப் பொருத்தமும் இல்லே... நீயே உன்னைத் தண்டிச்சுக்கிறதா நீ நினைச்சுண்டிருக்கலாம். பட், இட் ஈஸ் நாட் ஸோ... ஒரு பாவமுமறியாத அந்தப் பெண்ணை நீ தண்டிக்கிறே... இவ்வளவுதான் என்னாலே சொல்ல முடியும். யு கோ டு ஹெல், ஐ கேர்லெஸ்.''

ரகு கோபத்துடன் வெளியே போய்விட்டான்.

துருவ் சிறிது நேரம் வெட்டவெளியைப் பார்த்துக் கொண்டு நின்றான். ரகு கூறுவது உண்மைதானா? அவள் பெயர் என்ன... கோமளா... அவளைத் தண்டிப்பதாகவா அர்த்தம்?

அந்தப் பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்ளத் திடீரென்று முடிவு செய்ததற்கு என்ன காரணம்? சடகோபனால் வரதட்சிணை கொடுக்க முடியாதே என்பதினால் ஏற்பட்ட பச்சாத்தாப உணர்வா? அல்லது, சந்தியாவின் அப்பா பேரிலே உள்ள

இந்திரா பார்த்தசாரதி

கோபமா?

இல்லை, இல்லை. இது எதுவுமில்லை. அந்தப் பெண்ணின் மிரண்ட பார்வை. 'சாண்டிலியராக'த் தொங்கும் செல்வத்தைக் கண்டு முகத்தில் தெரிந்த ஆச்சரியம் கலந்த அச்ச உணர்வு...

அம்மா அதிர்ச்சியுறுவாளென்று அவனுக்குத் தெரியும். ஒருவேளை, அவளை அதிர்ச்சிக்குள்ளாக்குவதற்காகவும் அவனுக்கு இந்த எண்ணம் ஏற்பட்டிருக்கலாமென்று அவனுக்குப் பட்டது. அப்படி ஏற்பட்டிருந்தால், இது ஒரு மலிவான எண்ணம். ஆயினும் அவனுக்கு யார் மீதும் கோபமில்லை.

அப்பொழுது சந்தியாவைச் சந்தித்துப் பேச வேண்டும் போலிருந்தது. அவள் வீட்டிலிருக்கக் கூடிய நேரமில்லை இது. எந்தப் பிரச்னைக்காகவாவது; யாருடனாவது போராடிக் கொண்டிருக்கலாம். அவன் ஃபோன் செய்தான். அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. அவள் வீட்டிலிருந்தாள்.

''துருவ் ஹியர், உன்னைப் பார்க்கணும். எங்கே பார்க்கலாம்?'' என்றான் அவன்.

''என்ன முக்கியமான விஷயமா?''

''முக்கியமான விஷயமா இருந்தால்தான் பார்க்கணுமா? உலகத்திலே எதுவுமே எனக்கு முக்கியமான விஷயமாப் படலே.''

''இப்போ நான் பிஸியா இருக்கேன். சாயந்திரம் ஏழு மணிக்கு என் வீட்டுக்கு வாங்க.''

அவள் போனைக் கீழே வைத்து விட்டாள். அவள் இப்படிச் செய்ததினால், அவனுக்குள் ஏற்பட்ட பாதிப்பு என்னவென்று அவனால் வரையறுத்துக் கூற முடியவில்லை.

சடகோபன் வீட்டுக்குச் சென்றால் என்ன? அவரும், அவருடைய பெண்ணும், அவன் பணக்காரன் என்ற காரணத்தினால்தான் ஏற்றுக் கொண்டிருக்கிறார்களா?

அவனுக்குச் சடகோபன் ஒரு 'அவுட் ஹவுஸில்' இருக்கிறாரென்று தெரியும். எங்கே என்று தெரியாது. அம்மாவுக்கு போன் செய்து கேட்கலாமா? அவள் இதை விரும்ப மாட்டாள். அல்லது அவளுக்கே தெரியாமலிருக்கலாம்! உத்தம் சிங்குக்குத் தெரிந்திருக்கலாம்!

துருவ் கீழே சென்று உத்தம் சிங்கைக் கேட்டான். அவனை ஆச்சரியத்துடன் பார்த்த உத்தம் சிங், தன் கைப்பையைத் திறந்து, ஓர் அழுக்கடைந்த டயரியை எடுத்துச் சடகோபனின் முகவரியைத் தந்தான்.

துருவ் காரை எடுத்துக் கொண்டு புறப்பட்டான்.

இடுப்பிலிருந்த துண்டை எடுத்துக் கைகளைத் துடைத்துக் கொண்டு நின்ற சடகோபன் வாயடைத்து நின்றார்.

இவன் எதற்காக வந்திருக்கிறான்? மனத்தை மாற்றிக் கொண்டு விட்டேன் என்று சொல்லவா? இதுவும் ஒரு வகையில் நல்லதுதான். பெரிய இடத்துச் சம்பந்தம் எதற்காக என்று அவர் மனைவி நச்சரித்துக் கொண்டே இருக்கிறாள்.

''வாங்கோ... வாங்கோ...'' என்று வர



வேற்றார் சடகோபன்.

துருவ் புன்னகையுடன், தயங்கிக் கொண்டே உள்ளே நுழைந்தான்.

ஒரே அறை... அதுதான் சமையலறை, ட்ராயிங் ரூம், படுக்கையறை எல்லாம். சுவரில் சுவாமி படங்கள். சமையலறை என்பதற்கு அடையாளமாக, அதை மறைக்க அழுக்குப் படுதா ஒன்று தொங்கிக் கொண்டிருந்தது.

சடகோபனின் மனைவி, உடம்பைப்புடைவையினால் போர்த்திக் கொண்டு, அவனை வரவேற்பது எப்படி என்று தெரியாமல் கணவன் முகத்தைப் பார்த்துக் கொண்டு நின்றாள்.

அடுப்பில் வேலையாக இருந்த கோமளா, படுதா வழியாக எட்டிப் பார்த்துவிட்டு, அவனைக் கண்டதும் திடுக்கிட்ட நிலையில், மறுபடியும் அடுப்படியில் புகுந்து கொண்டாள்.

''சொல்லி அனுப்பிச்சிருந்தால் வந்திருப்பேனே, நீங்களே இப்படி... இவ்வளவு தூரம்...''

அவர் கயிற்றுக் கட்டிலிலிருந்த துணிகளை எல்லாம் ஓரமாக எடுத்து வைத்துவிட்டு அவனைக் கட்டிலில் உட்காரும்படி சொன்னார். உட்கார்ந்தான்.

''காப்பி சாப்பிடறேளா?'' என்றார் சடகோபன்.

''வேண்டாம்... கொஞ்சம் கோமளாவைக் கூப்பிட முடியுமா?''

''கோமளாவையா...?'' என்று தயங்கிக் கொண்டே கேட்ட சடகோபன் சொன்னார்: ''அவ அடுப்படியிலே வேலை செஞ்சுண்டிருக்கா... இதோ வரச் சொல்றேன்... கோமளா...''

கோமளா வந்தாள். அவள் கண்கள் மிகவும் அழகாக இருந்தன.

''நான் உன்னை ஒண்ணு கேட்கலாமா?'' என்றான் துருவ்.

கோமளா அப்பாவைப் பார்த்தாள்.

''என்னன்னு கேளு?'' என்றார் சடகோபன்.

''என்ன?'' என்றாள் கோமளா.

''கல்யாணம் பண்ணிக்கிறதுக்கு முன்னாலே நீ என்னைப் பத்தித் தெரிஞ்சுக்கணும்... என்னைப் பத்தி உனக்குத் தெரியுமா?''

''தெரியாது'' என்றாள் கோமளா.

''ஓ.கே. திஸ் ஈஸ் குட்... நான் உன்கிட்டேயிருந்தும், ஒண்ணும் எதிர்பார்க்கலே, நீயும் என்கிட்டேயிருந்து எதுவும் எதிர்பார்க்க வேணாம். இப்படியிருந்தால் கல்யாணத்துக்கப்புறம், ரெண்டு பேருக்கும் எந்தவிதமான ஏமாற்றமுமிருக்காது. புரிஞ்சுதா? நீ உன் இஷ்டப்படி இருக்கலாம். நான் என்னுடைய ரசனையை உன் மீது சுமத்தமாட்டேன். உனக்கு என்ன பிடிச்சிருக்கோ, அதை நீ செய்யலாம். ஆனா, உனக்கு எது பிடிக்குமோ, அது எனக்கும் பிடிச்சிருக்கணும்னு அவசியமில்லே, நான் அதைச்செய்யணும்னு நீ எதிர்பார்க்காதே...''

''என்ன அப்படிச் சொல்றேள்? உங்களுக்கு எது பிடிக்குமோ, அது அவளுக்கும் நிச்சயமாப் பிடிக்கும்...'' என்றார் சடகோபன்.

''உனக்குப் பாட வருமா?'' என்றான் துருவ்.

''உங்ககிட்டே கத்துண்டு போறா?'' என்றார் சடகோபன் சிரித்துக் கொண்டே.

''பாட்டிலே உனக்கு இன்ட்ரெஸ்ட் உண்டா?''

''நிறைய உண்டு. பாட்டுக் கத்துத் தரத்தான் எனக்கு வசதியில்லே,'' என்றார் சடகோபன்.

''எனக்குப் பாடத் தெரியாது. பாட்டிலேயும் எனக்கு இன்ட்ரெஸ்ட் கிடையாது'' என்றாள் கோமளா.

சடகோபன் அவளைக் கோபமாகப் பார்த்தார்.

''குட். நீ ஒளிவு மறைவு இல்லாமே பேசறே. இது எனக்குப் பிடிச்சிருக்கு...'' என்றான் துருவ்.

''அவ சும்மா சொல்றா. ஆத்து வேலையெல்லாம் பாடிண்டுதான் செய்வா...'' என்றார் சடகோபன்.

''உனக்கு எதிலே இன்ட்ரெஸ்ட்?''

''நன்னாச் சமைப்பேன். சினிமாவுக்குப் போவேன். சினிமாப் பாட்டு நிறையக் கேட்பேன்.''

''குட்... ஐ லைக் யு...'' என்றான் துருவ் புன்னகையுடன். உடனே எழுந்தான். ''சரி, நான் வர்றேன்...''

**அ**வன் வீட்டுக்குப் போன போது, அவன் அம்மா அதிசயமாக வீட்டிலிருந்தாள். அலுவலக அறையில் யாருடனோ பேசிக் கொண்டிருந்தாள்.

துருவ் அறையைக் கடந்து செல்வதைப் பார்த்ததும், பத்மநாபன் மஞ்சுளாவிடம் கூறினார்: ''துருவ் போறான்.''

''அவன் போனா என்ன?'' என்றாள் மஞ்சுளா.

''துருவ்வையும் உங்க தலைவலியைக் கொஞ்சம் பகிர்ந்து கொள்ளச் சொல்லுங்களேன்.''

''தோ, அவன் முடியாதுன்னு சொல்லுவான்.''

''ஆனா, இதையே அவனுக்குச் சவாலாக் காமிச்சா ஒரு வேளை...'' என்றார் பத்மநாபன்.

## படித்துக் கொண்டே இருக்க வேண்டும்!

● மழலையின் மொழிகளைக் கேட்டுக் கொண்டே இருக்க வேண்டும்; இனிமையான இசையை ரசித்துக் கொண்டே இருக்க வேண்டும்; வைரமுத்துவின் வரிகளைப் படித்துக் கொண்டே இருக்க வேண்டும்!

நந்தியநல்லூர். நிலாப்பிரியன்.

● 'பயிர்க் கொலை செய்யும் பூச்சியைக் கொல்லத் தெளிக்கும் மருந்து, உயிர்க் கொலை ஆகாது!' என்று வாதம் செய்தாலும் வன்முறைக்குப் பதில் வன்முறையே என்பது சரியல்ல. இயற்கையாக ஏதேனும் குடுவை வெடித்தோ, அல்லது விபத்திலோ விஞ்ஞானியை மரணம் ஆட்கொள்ளும் படி செய்திருக்கலாம்.

புத்தாம்பூர். இரா. செல்வபாண்டியன்.

● வைரமுத்து எழுதிய வசந்தத் தமிழ்க் கவிதை வேற்றுமைப் பள்ளத்திலிருந்து மனித நேயம் எனும் சிகரம் நோக்கி விரைந்து மானுடம் காக்கும் பாதை போட்டு, மாணிக்க மகுடமாய்த் திகழ்ந்தது! அரஸ் ஓவியம் அதில் பதித்த ரத்தினம்!

திருப்பரங்குன்றம். டி. கே. சுப்பிரமணியன்.

● அற்புதமான சொல்லோவியத்தை எங்கள் "நெஞ்சப் பலகை"யில் நிரந்தரமாக எழுதி விட்டார் வைரமுத்து.

மருதூர் தெற்கு. தி. கருணாநிதி.



● அடுத்த இதழ் எப்போது வரும், அடுத்த இதழ் எப்போது வரும் என இருபது வாரங்களாக ஏங்க வைத்துக் கொண்டிருந்தது. வார்த்தைகளுடன், கற்பனைகளையும், சிந்தனைகளையும் கருத்துப் பெட்டகமாய்த் தந்த வைரமுத்து, எங்கள் நெஞ்சத்தில் மிளிர்கிறார்.

கவியக்காவினை. கே. புஷ்பராஜ்.

● வைரமுத்து தம் கவிதையின் அபார, அற்புத நடையின் மூலம் எங்களைக் காற்று, மலை, தென்றல், சூரியன், சந்திரன், காடு, மேடு போன்ற எத்தனையோ இடங்களுக்கு அழைத்துச் சென்று விட்டுத் திடீரென்று பாலைவனத்தில் போட்டு விட்டது போல் ஒரு தவிப்பு! இத்தனை சீக்கிரம் முடித்ததைத்தான் சொல்கிறேன்!

சென்னை – 45. ஏ. ஜப்பர் காதர்.

● சிகரங்களை நோக்கியல்ல; சிகரத்தையே எட்டிவிட்டது வைரமுத்துவின் புதுமையான க(வி)தைத் தொடர்...!

பெங்களூர் – 13. கவிஞர் 'தாரகை'

---

"எப்படிச் சவாலாக் காமிக்கணும்ங்கிறீங்க?"

"நம்ம பினாமி விவகாரம் சன்னானாவுக்குத் தெரிஞ்சு போச்சு. அதனாலே அவன் நாம போலி ஏஜென்ஸி எடுத்து வியாபாரம் பண்ணி, தரகை அவனுக்கும் அவனோட சேர்ந்த மேல் மட்டத்துக்கும் தரணுங்கிறான். அவன் சொல்றபடி நாம செய்யலாம், அப்படிச் செஞ்சா, இந்தக் கட்சி பதவியிலிருக்கிற வரைக்கும் ஓ. கே... அப்புறம்? இதுதான் என்னுடைய பயம்... இந்த நிலைமையிலிருந்து, நாம தப்பிச்சுண்டாகணும்... துருவ்வை யோசனை கேட்கறதிலே என்ன தப்பு? நான் கேட்கட்டுமா?"

"நோ... அவனுக்கு இதிலே இன்ட்ரெஸ்ட் கிடையாது. நாமதான் முடிவு எடுத்தாகணும். அதுக்காகத்தான் உங்களைக் கூப்பிட்டேன். துருவ் வியாபாரத்திலே இன்ட்ரெஸ்ட் எடுத்திருந்தா எனக்கு எதுக்காக இந்தத் தலைவேதனை? நான் ரெஸ்ட் எடுத்திண்டிருப்பேனே? இன்னொரு விஷயம், துருவ்வுக்கும் கல்யாணம் ஆகப் போறது..."

"குட்... யாரு அந்த அதிர்ஷ்டக்காரப் பொண்ணு?"

"இ ஆம் நாட் ஷ்யூர்?"

"அப்படின்னா?"

"அதிர்ஷ்டக்காரப் பொண்ணா இல்லியான்னு... சரி... நீங்க சொல்லுங்க. இதைப் பத்தி... நீங்க யூரோப் போய் இதை ஆர்கனைஸ் செய்யறேளா? வேற வழி இருக்கிறதா எனக்குத் தெரியலே..."

"நான் போகணுமா?"

"ஆமா... நீங்கதான் 'லோ ப்ரொஃபைல் பர்ஸன்! நீங்க போனா, யாரும் ஒண்ணும் சந்தேகப்பட மாட்டாங்க. உங்களை வீட்டுக்கு வரச் சொன்னதே இதுக்காகத்தான்."

"இன்னொரு வழியுமிருக்கு."

"என்னது?"

"சன்னானாவைத் தீர்த்துக் கட்டிடலாம்."

"டோன்ட் பி ஸில்லி..." என்றாள் மஞ்சுளா.

"இ ஆம் டெட் ஸீரியஸ்" என்றார் பத்மநாபன்.

(தொடரும்)



* பிடித்த அம்சம்

# 'ஜெ'யின் ஸ்கட்டை மு.க.வின் பேட்ரியாட் முறியடிக்குமா?



* இரும்பு மனிதர்



* ரசிகர் மன்றம்!

○ அ. ராஜா ரஹ்மான், திருப்பரங்குன்றம்.

**? வங்க தேசத்தில் கலிதா ஜியா ஆட்சியைப் பிடித்திருப்பது குறித்து?**

! ஜனநாயகம் மலர்ந்ததில் மகிழ்ச்சி. வலுவான ஜனநாயகமாக மலராததில் கவலை. கலிதா ஜியா கணிசமான வெற்றி பெற்றிருந்தாலும் வேறு பல சிறு கட்சிகளின் ஒத்துழைப்போடுதான் பெரும்பான்மை பலம் பெற்று அரசு அமைக்கிறார். அவர்கள் ஆதரவை இழந்து விடவும் கூடாது. அவர்கள் ஆதரவைப் பெற அவர்கள் சொற்படி ஆடுவதாகவும் ஆகிவிடக் கூடாது. கத்தி முனை நடனம்தான். காயப் பட்டுக் கொள்ளாமல் ஆடினால் ராணுவமும் அடங்கி நடக்கும். என்னதான் சொல்லுங்கள், நம் மனதுக்கு நெருங்கிய முஜிபுர் ரஹ்மான் மகள் ஹசினா போதிய அளவில் மக்கள் ஆதரவைப் பெறாதது நமக்குக் கொஞ்சம் வருத்தம்தான்.

○ பி. சிவா, பாளையங்கோட்டை.

**? அரசியலில் ஜெயலலிதா — காயா, பழமா?**

! அரை வெட்டு!

○ வி. வெங்கட், சீர்காழி.

**? சதாம் ஹுசைனுக்கு ரசிகர் மன்றம் வைத்துள்ளது பற்றி?**

! ஜனநாயகம் என்ற மரத்தின் பழங்களை அனுபவிக்கும் போது மரத்தின் சில முட்களைப் பொறுத்துக் கொள்ளத்தான் வேண்டும். உங்களுக்குத் தெரியுமா? ஜெர்மனியில் ஹிட்லருக்குக் கூட இன்றும் ரசிகர் மன்றம் உண்டு.

* காத்திருக்கிறார்...



* மீண்டும் மெஜாரிடி?



○ பத்ம சிவாஜி, நீடாமங்கலம்.

**? நம் பிரதமர் சந்திரசேகரிடம் உங்களுக்குப் பிடித்த அம்சம் யாதோ?**

! 1. ராஜினாமா செய்தது; 2. நாடாளுமன்றக் கலைப்புக்குச் சிபாரிசு செய்தது; 3. ராஜீவுக்கு ஆதரவு இல்லை என்று திட்டவட்டமாய் அறிவித்தது. மங்களம்!

○ டி. சீனிவாசன், சென்னை.

**? பாண்டிச்சேரி சட்டசபை கலைக்கப் பட்டது சரியான செயல்தானா?**

! சரிதான். அங்கே இருதரப்பும் கிட்டத் தட்ட சம பலத்தில் உள்ளதாலும் இரண்டு பேர், மூன்று பேர் இந்தப் பக்கமோ, அந்தப் பக்கமோ பாய்ந்தால் கட்சித்தாவல் சட்டத்திலிருந்தும் தப்பி ஆட்சி அமைப்பு அல்லது கவிழ்ப்புக்கும் வழிவகுக்கலாம் என்பது போல் ஒரு விரும்பத்தகாத நிலை. ஆளுனர் ஹர் சொரூப் சிங் ரொம்ப புத்திசாலித்தனமாக இதை உணர்ந்து சட்டசபைக் கலைப்புக்கு உரிய நேரத்தில் சிபாரிசு செய்துவிட்டார். பின்னர் டி. ராமச்சந்திரன் தமக்கு மெஜாரிடி இருப்பதாக எடுத்துக்காட்டவே, அதையும் மத்திய அரசுக்குத் தெரிவித்து, தமது நற்பெயரைக் காப்பாற்றிக் கொண்டு விட்டார். மத்திய அரசு, முந்தைய அறிக்கையின் கீழ் நடவடிக்கை எடுத்து விட்டது. சில தினங்களுக்கு முன்னர்தான் சட்டமன்றத்தில் மெஜாரிடியை நிரூபிக்க முடியாது என்பதால் ராஜினாமா செய்த டி. ராமச்சந்திரன் தற்போது மீண்டும் மெஜாரிடி இருப்பதாகக் கூறுவதை எப்படி ஆரோக்கிய



* என்ன செய்யப் போகிறார்?

மான சூழ்நிலையாகக் கருத முடியும்? அபூர்வமாகச் சந்திரசேகர் அரசு செய்த நல்ல காரியங்களுள் ஒன்று பாண்டி சட்ட மன்றக் கலைப்பு.

o பரத், கோவை.

**? ஜெ.யின் ஸ்கட்டை, கருணாநிதியின் பேட்ரியாட் முறியடிக்குமா?**

! சவால் – எதிர்ச்சவால், சொற்கணை – எதிர்க்கணை என்றெல்லாம் பார்த்தால், கருணாநிதியின் பேட்ரியாட்டுக்குத்தான் வெற்றி. அதில் ஒன்றும் சந்தேகமில்லை. ஆனால் தேர்தல் களத்தின் போராட்ட முடிவுகள் இந்த ஏவுகணைகளால் மட்டும் நிர்ணயிக்கப்படுவதில்லையே!

o மல்லிகை மன்னன், மதுரை.

**? விடுதலைப் புலிகளுக்கு இந்திரா காந்தியும், எம். ஜி. ஆரும் உதவினால் தேசப்பற்று; கருணாநிதி செய்தால் மட்டும் தேச விரோதம் — என்னங்க நியாயம்?**

! ரொம்ப அநியாயம்தாங்க. ஆனா ரெண்டுக்கும் ஒரு சின்ன வித்தியாசம் இருக்குதுங்க. அதுதாங்க, கருணாநிதி வகையறா முன் காலத்துல பேசிக்கிட்டிருந்த பிரிவினை வாதம். அதுக்கு அண்ணாவே சமாதி கட்டிட்டாருன்னாலும் அந்த முத்திரையைக் குத்தித்தான் இன்னைக்கும் கருணாநிதியை எதிர்க்கிறவங்க குளிர் காய்ஞ்சுக்கிட்டிருக்காங்க. அதை விட்டால் இவங்களுக்கு வேறு துருப்புச் சீட்டே கிடையாதுங்களே!

o எஸ். எஸ். மணி, திருவனந்தபுரம்.

**? வளைகுடாப் போர்தான் முடிந்து விட்டதே, இனி ஏறிய விலைவாசியெல்லாம் இறங்கி விடுமா?**

! அது உண்மையான காரணமாக இருந்தால்தானே இறங்கும்? உண்மைக் காரணம் நமது அரசின் வரி விதிப்பு – பொருளாதாரக் கொள்கைகளே ஆதலால் இறங்காது. இடைக்கால பட்ஜெட் நிறைவேறியதும் மேலும் விலை உயரவே வாய்ப்புகள் அதிகம்!

o ம. செந்தில்நாதன், மதுரை.

**? பாட்டாளி மக்கள் கட்சியைத் தங்கள்**

## நீங்கள் கேட்டவை — தராசு

**அணிக்கு இழுக்க ஒவ்வொரு கட்சியும் பிரயாசைப்படுவது ஏன்?**

! அதனுடைய வோட்டு வங்கியில் கணிசமான வோட்டுக்கள் வைப்பு நிதியாக இடம் பெற்றிருப்பதுதான்!

o கு. கணேசன், காட்டாங்குளத்தூர்.

**? ரஞ்சன் விஜயரத்னேவைக் கொலை செய்தவர்கள் — ''என்னைக் கொலை செய்ய முயற்சி செய்பவர்கள் வெற்றி பெற வாழ்த்துகிறேன்'' என்று கூறிய ரஞ்சன் விஜயரத்னே; இருவரில் யாருடைய வீரம் போற்றத்தக்கது?**

! இரண்டுமே வீரமும் அல்ல; இரண்டுமே போற்றத்தக்கதுமல்ல. கொலை முயற்சி, பயங்கரவாதம் முதலியவை ஒரு போதும் வீரம் ஆகாது. இவற்றை எதிர்த்துச் சமாளிப்பது வீரம்தான். ஆனால் இவ்விஷயத்தில் அசட்டுத் துணிச்சல் கூடாது. ஒளிந்திருந்து தாக்கும் கோழைகளை மறைந்திருந்துதான் பிடிக்க வேண்டும். விஜயரத்னே இப்படி ஒரு திட்டம் இருப்பதாகத் தெரிய வந்த பிறகு, சவால் விடுவதைத் தவிர்த்து இன்னும் அதிக முன்னெச்சரிக்கையுடன் இருந்திருக்கலாம். அப்படி இல்லாமல் போனதால் இலங்கை ஓர் இரும்பு மனிதரை இழந்து துக்கத்தில் ஆழ்ந்து போனது.

o ஈ. டி. விஜயகுமார், ஈரோடு.

**? அனுதாப வோட்டால் மீண்டும் தி.மு.க. ஆட்சியைப் பிடிக்க வாய்ப்பு உண்டா?**

! அனுதாபம் இங்கேயும் வோட்டு அங்கேயும் போய் விட்டால் என்ன செய்வது!

o ரேவதி பிரியன், ஈரோடு.

**? அண்மையில் ரசித்துப் பார்த்த படம்?**

! கணபதி ஸ்தபதி, சிற்பக்கலை பற்றி விளக்கிய அற்புதமான படம். ஐம்பத்திரண்டே நிமிடங்களில் அசர வைத்த படம். ஜூனியர் கே. பி. தயாரித்தது!

o ஆர். வேங்கடேஷ், குத்தாலம்.

**? ராமராஜன் என்ன செய்து கொண்டிருக்கிறார்?**

! ஜெயலலிதாவிடமிருந்து எப்போது அழைப்பு வரும் என்று காத்துக் கொண்டிருக்கிறார்.

o இ. தமிழரசு, பண்ருட்டி.

**? ரஜினிகாந்த் தி. மு. க. வில் சேரப் போகிறாராமே?**

! புத்திசாலி நடிகர்கள் செய்கிற காரியமில்லை.

* ரூ. 20 பரிசு பெறுபவர்:

பத்மசிவாஜி,
34, வடக்கு வீதி,
நீடாமங்கலம் — 614 404.

## வட்டமேஜை

○ 'பொம்மலாட்ட அரசு' தலையங்கம் அருமை. நிலையற்ற அரசினால் நாட்டின் பொருளாதார, தொழில் துறை அடைகின்ற நஷ்டத்தோடு ஒப்பிட்டால் தேர்தல் நடத்துவதால் ஆகும் செலவு ஒரு பெரிய நஷ்டமாக இராது என்று தாங்கள் சொல்லி இருப்பது நூற்றுக்கு நூறு சரியானதே. ஒருவேளை ராஜீவே மீண்டும் ஆட்சிக்கு வந்தாலும் பரவாயில்லை — ஒரு நிலையான ஆட்சி அமைந்ததே என்ற திருப்தியாவது இருக்கும் என்ற வரிகளும், மக்கள் அளித்த தண்டனையை அவர் படிப்பினையாக ஏற்றால், நிலையான ஆட்சியோடு, நல்லாட்சியாக அமையவும் வாய்ப்பு உண்டு என்ற வரிகளும் தங்களுக்கு ராஜீவ் மீதாகட்டும், இ. காங்கிரஸ் மேலாகட்டும் கண்மூடித்தனமான — ஒருதலைப்பட்சமான எதிர்ப்புணர்ச்சி இல்லையென்பதையும், அவர்களது தவறான நடவடிக்கைகளே தாங்கள் அவர்களை எதிர்க்கவும், குறை கூறவும் காரணம் என்பதையும் பட்டவர்த்தனமாக வெளிப்படுத்துகின்றன.

கோவை, — 26, வெ. உத்தமராஜ்.

○ பொம்மலாட்ட அரசின் அனுபவங்கள் போதும், போதும் என்றாகி விட்டது என்றதோடு, நிலையான ஆட்சி அமைந்திடத் தேர்தல் அவசியம் தேவை என்று நீங்கள் தலையங்கத்தில் குறிப்பிட்டது, மக்களின் ஏகோபித்த குரலையே எதிரொலித்தது.

கொணவட்டம்,
கே. ஆர். தேவேந்திரன்.

○ திருமணமான கையோடு தனிக் குடித்தனம் செல்ல நினைப்போருக்குக் 'காப்பகத்தில் குழந்தை அம்மாவுக்கு ஏங்குமா?' கட்டுரையின் மூலம் சிந்திக்க ஒரு வாய்ப்பு!

மேல்பட்டி, எல். மாறன்.

○ 'காப்பகத்தில் குழந்தை அம்மாவுக்கு ஏங்குமா?' என்ற கேள்விக்கான பதிலை, உமது அட்டைப்படப் பிஞ்சுகளே நிரூபித்து விட்டனவே! என்ன ஏக்கமான பார்வை!

திருச்சி — 2. ஆர்க். எழிலன்.

○ மாணவர்களுக்கான புகைப் படப் போட்டியில் தேர்ந்தெடுக்கப்பட்ட புகைப்படங்கள் உண்மையிலேயே எங்களை அசத்தி விட்டன.

திருவெண்ணெய்நல்லூர்,
எஸ். எஸ். பூங்கதிர்.

○ எங்களைச் சிரிக்க வைத்ததன் மூலம் அகஸ்தியன் எங்களது வயிற்றைப் பதம் பார்த்து விட்டார், போங்கள்!

ஈரோடு — 1. ரேவதிப்ரியன்.

○ வீரன் ஜடாயு வீடு பெற்ற திருத்தல வரலாற்றினைப் படித்தும், புகைப்படங்களைப் பார்த்தும் பரவசமடைந்தேன்! நாற்பத்தொன்பது வைணவத் தலங்களைத் தரிசித்துள்ள எனக்கு, ஐம்பதாவது வைணவத் தலத்தைத் தரிசனம் செய்ய வைத்த உங்களுக்கு, மனமார்ந்த வந்தனம்!

கும்பகோணம், — 1,
கே. என். பாலகிருஷ்ணன்.




# "அட்டைப் படமே நிரூபித்துவிட்டதே!"

○ விஞ்ஞான வளர்ச்சியால் அறிமுகமான கேபிள் ட. வி. யால், ஐம்பதாயிரம் இளைஞர்கள் வேலை வாய்ப்புப் பெற முடியுமென்ற, ராமுவின் வாதமும், தியேட்டர்களையே மூடும் அபாயம் இதனால் உண்டு என்று கூறும் ஜி. வி. யின் வாதமும் சரியா, தப்பா என்பது ஒருபுறமிருக்க, கேபிள் ட. வி. என்றால் என்ன என்று, சாதாரண மக்கள் கூடத் தெரிந்து கொள்ளும் வகையில், நீங்கள் கட்டுரை வெளியிட்டதற்குப் பாராட்டுக்கள்!

கும்பகோணம்,
புலவர் எஸ். கே. மூர்த்தி.

○ சினிமாத் துறை வளர்ந்த நிலையில் நாடகத் துறையை நலிவுறச் செய்யவில்லையா? நீண்ட காலமாக ஸ்டுடியோவில் படம் எடுத்துக் கொண்டிருந்தவர்கள் கிராமங்களுக்குக் கேமராவைத் தூக்கிச் சென்றதால் 'செட்' போடுபவர்களின் நிலை பாதிக்கப்படவில்லையா? நானூறுக்கு மேற்பட்ட இசைக் கருவிகள் கொடுக்கும் இசையை, ஒரு கம்ப்யூட்டர் கொடுப்பதால் அந்த இசைக் கலைஞர்கள் பாதிக்கப்பட மாட்டார்களா? சினிமாத் துறையைச் சேர்ந்தவர்கள் கேபிள் ட. வி. யை எதிர்ப்பதில் கொஞ்சம் கூட நியாயம் இல்லை.

வேலூர் — 6.
பொ. பொற்செல்வன்.

○ தமிழக காங்கிரஸ் தலைவரின் நிகழ்காலப் போக்கைப் பளிச்சென்று விளக்கிய கார்ட்டூன் அருமை!

சத்துவாச்சாரி, பி. பாலன்.

○ 'அழுத்தக்காரி' சிறுகதையைப் படிக்க ஆரம்பிக்கும் போது, ரேவதி கொடுமைக்காரியாக இருப்பாளோ என எண்ணினேன். ஆனால், கதையைப் படித்து முடித்தும் ரேவதி போன்ற ஒரு பெண், குடும்பத்தில் மருமகளாய் வந்தால், கல்யாணமாகாத நாத்தனார்களுக்கு நிச்சயம் நல்ல வாழ்க்கை அமையும் என்ற முடிவுக்கு வந்து விட்டேன்.

கோவை — 6,
ஏ. ஜி. கல்யாணசுந்தரம்.

○ சுப்ரமணியன் ரவிச்சந்திரனின், "குறிஞ்சிகளுக்கிடையே ஒரு கள்ளிச் செடி" — பெயருக்கேற்றாற்போன்றே கதையும் தான்! ஆனால் கதையில் இடம்பெறும் 'தாடி வைத்து, பவர் கிளாஸ் போட்ட' — இளைஞனைப் படத்தில் காணவில்லையே!

குடந்தை — 1,
டி. வி. என். நந்தன்பா

○ அடிக்கடி மாறும் ஆளுனர்களைப் பற்றிப் பா. ரா. கூறிய விதம் சிரிக்க வைத்ததுடன் சிந்திக்கவும் வைத்தது!

முத்துப்பேட்டை,
கோவிலூர் உதயகுமார்.

○ இந்த இதழ் மேலட்டை வண்ணப்படம்: உத்ரா.

○ மருத்துவம் தொடர்பான மற்ற கட்டுரைகளுக்கான படங்கள்: ரமணன்.



# நந்தினியிடம் ஒரு சொல்

மதுமிதா

நந்தினி துல்லியமாய் அதிர்ந்தாள்.

''என்ன பரசு?'' என்றாள் சந்தேகமாக.

''ஐ லவ் யூ நந்தினி...!'' — பரசு மீண்டும் சொன்னான்.

இந்த முறை அவள் முகம் சிவப்பேறிப் போனது.

''ச்சே... என்ன பரசு? உனக்கு ஏன் புத்தி இப்படிப் போனது?''

பரசு அவள் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான்.

''நீயும் எல்லா ஆம்பிளை மாதிரிதானா? பொம்பளை கொஞ்சம் சிரிச்சுப் பேசிட்டா உடனே 'ஐ லவ் யூ'தானா? ஏன் இப்படிக் கேவலப்படுத்தறே பரசு?''

''இதிலே என்ன நந்தினி கேவலம்? உன்னை எனக்குப் பிடிச்சிருக்கு. மனப்பூர்வமா விரும்பறேன். நட்பு, கிட்புன்னு பொய் சொல்ல விரும்பலே. அதான் சொன்னேன். சொன்ன நேரம், சொன்ன விதம் சரியில்லாம இருக்கலாம் நந்தினி. ஆனா சொன்ன விஷயம் சத்தியமான நிஜம். என் மனசிலேர்ந்து வந்த விஷயம்...!''

''இல்லை பரசு. என்னால் ஒத்துக்க முடியலை. ஏன் பரசு அப்படிச் சொன்னே...? எப்பயாவது உனக்கு நம்பிக்கையூட்டற விதமா நான் நடந்துக்கிட்டேனா...? எல்லார்கிட்டேயும் பழகற மாதிரிதானே உன்கிட்டேயும் பழகினேன். ஏன் பரசு?''

நந்தினி மிகவும் நொந்து போய்ப் பேசினாள்.

''நீ நம்பிக்கையூட்டினாய் என்று நான் சொன்னேனா? ஒருத்தர் மேல் பிரியம் வைக்கிறதுக்கு இன்ன இன்ன காரணம்னு பட்டியல் போட்டா காட்ட முடியும்? உன்னைப் பார்த்த அன்னைக்கே காதலாயிட்டேன்னு சினிமா வசனம் பேசலை. உன்கிட்டப் பழகப் பழக, பேசப் பேசத்தான் நான் கொஞ்சம் கொஞ்சமாய் என்னை இழந்தேன்....!''

அவன் சொல்லச் சொல்ல நந்தினிக்கு எரிச்சல் ஏற்பட்டது.

'ச்சே... என்ன மனிதன் இவன்? என் உணர்ச்சிகளைப் புரிந்து கொள்ளத் தெரியாத முட்டாளாயிருக்கிறான்!'

''லுக் பரசு... நீ தப்பான முடிவுக்கு வந்திருக்கிறாய். நான் அந்த மாதிரி எண்ணத்துடன் உன்னிடம் பழகவில்லை. எல்லாரிடமும் பழகுவது போல் மிகச் சாதாரணமாய்த்தான் பழகினேன்...!''

''இல்லே... நந்தினி...!''

நந்தினி குறுக்கிட்டாள்.

''ஸ்டாப் இட் பரசு. விஸ்வநாதன் எவ்வளவு அற்புதமான மனிதன். இந்த ஐந்தாண்டுப் பழக்கத்தில் என்னிடம் ஒரு நிமிடம் கூட வேறு எண்ணத்துடன் பேசியதில்லை. அவன் அறிமுகப்படுத்தியதால்தான் உன்னிடம் பழகவே ஆரம்பித்தேன்.

என்ன ஒரு ஆறு மாதம் பழகியிருப்போமா...?''

பரசு தலைகுனிந்திருந்தான்.

''போய் விஸ்வநாதனிடம் இங்கே நடந்ததைச் சொல். பளீரெனச் செருப்பால் அடிப்பான். என்னைப் பற்றிச் சொல்வான். வாழ்வில் சிநேகிதத்தின் அருமை புரிந்தவன். அவனிடம் பழகியும் இவ்வளவு மட்டரகமாய் உன் புத்தி போனதே... இங்கே பார்.. பரசு... இவ்வளவு நடந்த பின் நாம் இனிமேல் சகஜமாய்ப் பழகச் சாத்தியமில்லை.. நாம் ஒதுங்கிக் கொள்வது நல்லது என்று நினைக்கிறேன். ஆனால் ஒன்று சொல்கிறேன். விஸ்வநாதனிடம் கட்டாயம் பேசு.. உனக்குத் தெளிவு பிறக்கும்....!''

நந்தினி போய் விட்டாள்.

பரசுவின் மனம் வலித்தது.

என்ன பெண் இவள்?

உண்மையான அன்பைப் புறக்கணிப்பதுதான் இன்றைய நட்பு போலும்.

எனக்கு இவளைப் பிடித்திருந்தது. 'ஐ லவ் யூ' சொன்னேன்.

பதிலுக்கு அவளும் சொல்ல வேண்டும் என்று கட்டாயப்படுத்தினேனா? பின் ஏன் இவள் இவ்வளவு ஆக்ரோஷமாய்த் திருப்பி அடித்தாள்? என் கணிப்பு, என் தேர்வு தவறா?

விஸ்வநாதனிடம் இது குறித்துப் பேச வேண்டும்.

நந்தினி சொன்னது போல் விஸ்வநாதன் செருப்பால் அடிக்கவும் செய்வான்.

பரசு மேன்ஷனை நோக்கி நடந்தான்.

**வி**ஸ்வநாதனிடம் நடந்ததை அப்படியே சொன்னான்.

நந்தினி சொன்னது போல் செருப்பால் அடிக்கவில்லை.

அதற்குப் பதில் வார்த்தைகளால் அடித்தான்.

''பரசு... நீ ஒரு முட்டாள். யாரிடம் என்ன சொல்வது என்ற விவஸ்தையே இடையாதா? நீ காதலித்துத்தான் ஆக வேண்டும் என்று முடிவு பண்ணினால் அதற்கு நந்தினி தான் கிடைத்தாளா...?''

''இல்லே விசு... நான் மனப்பூர்வமாக அவளை விரும்புகிறேன்...!''

''அதுக்கு ஒரு தகுதி வேண்டாமா?''

''என்ன... நான் அவ்வளவு மட்டமாகப் போய்ட்டேனா...?'' என்றான் பரசு ஆத்திரமாக.

''முட்டாள். உன்னையா சொன்னேன்? அந்தத் தகுதி அவளுக்குக் கிடையாது என்றேன்...!''

பரசு திடுக்கிட்டான்.

''என்ன சொல்றே நீ?''

''ஆமாம் பரசு. நந்தினியிடம் பேசு, பழகு, சிரி.. சினிமாவுக்குக் கூப்பிட்டாப் போ. லவ் யூ சொல்லாதே.. அவ கல்யாணம் பண்ணிக்க லாயக்கே இல்லாதவ. என்கிட்டப் பேசுவா... உன்கிட்டப் பேசுவா.. அந்த மார்வாடிப் பையன்கிட்டேயும் பேசுவா.. எவன்கிட்ட வேணும்னாலும் பல்லிளிப்பா.. கேட்டா சோஷியல்.. அது, இதும்பா.. அதெல்லாம் பழகத்தான் லாயக்கு. கல்யாணம் பண்ணிக்கவோ, காதல் பண்ணவோ யோக்கியதை இல்லாத ஜென்மம்...!''

விஸ்வநாதன் பேசிக் கொண்டிருந்தான்.

''நம்ப உமா மாதிரி பெண் கிடைத்தாக் காதல் பண்ணு. குனிந்த தலை நிமிராது. எந்த ஆம்பிளைகிட்டயும் முழுசா மூணு வார்த்தை பேசாது. என்ன புரியுதா?''

பரசுவுக்கு நந்தினியின் மேல் இரக்கம் வந்தது.

# மருத்துவச் செலவுகள் அதிகமாவதேன்?



''ஏன் மருத்துவமனைச் செலவுகள் அதிகமாக இருக்கின்றன?'' — இந்தக் கேள்வியை டாக்டர் எஸ். அசோக்கிடம் கேட்டோம்.

''எக்ஸ்-ரே பிலிம், ஈ. ஸி. ஜி. தாள்கள் எல்லாமே விலைவாசியால் பாதிக்கப்பட்டு, ஏகத்துக்கு விலை ஏறியிருக்கின்றன. அறுவைச் சிகிச்சைக்குப் பிறகு தேவைப்படும் சில முக்கிய, (மூன்றாம் ஜெனரேஷன்) அதி நவீன ஆன்டிபயாடிக்குகள் விலை அதிகம்... தவிர, எல்லா உபகரணங்களும் ஒருமுறை உபயோகித்துவிட்டுத் தூக்கி எறிந்துவிட வேண்டியவை — ஊசி, சிரிஞ்ச், டாக்டர்கள் நர்சுகளுக்கான கவசமூடி. நோயாளிகளுக்குக் கொடுக்கும் டிரிப் எல்லாமே. எனவே இந்த வகைச் செலவுகளும் கூடிவிடுகின்றன. அதோடு, இறக்குமதி செய்யப்படும் மருத்துவமனை உபகரணங்களுக்கு வரிகளும் அதிகம். இதுதவிர இதை விற்பனை செய்பவர்களும் கிட்டத்தட்ட நூறு சதவிகித லாபத்தை விலையோடு சேர்த்துவிடுகிறார்கள்...''

''இந்தியாவிலேயே இவற்றைத் தயாரிக்கும் தொழில் நுட்பம் இல்லையா?''

''இருக்கிறது. நம் விஞ்ஞானிகள் செய்ய முடியும். டெல்லியில் ஒருவர் சி. டி. ஸ்கான் தயாரிக்க லைசென்ஸ் பெற்று, தயாரிக்கவும் தொடங்கி விட்டார்.''

''நாற்பது சதவிகித இலவச வைத்தியம் செய்தால், கஸ்டம்ஸ் ட்யூட்டியிலிருந்து இம்மாதிரி இயந்திரங்களுக்கு இறக்குமதி வரி விலக்கு அளிக்கப்படுகிறதாமே?''

''ஆமாம். பெரிய மருத்துவமனைகள் விஷயத்தில் இது சாத்தியம்தான். ஆனால் சிறு மருத்துவமனைகளில் இது அவ்வளவு சாத்தியமில்லை!'' என்கிறார் டாக்டர் அசோக்.

# ‘சப்ளை’ இருந்தால்தான் ‘ரிப்ளை’ வரும்!

○○ நான் கல்லூரியில் படித்த போது, வடமாநிலங்களுக்குக் கல்விச் சுற்றுலாச் சென்று வந்தோம். வந்த பிறகு எங்கள் பேராசிரியர் ஒருவர், சுற்றுலாவில் நாங்கள் பார்த்த இடங்கள் பற்றி மாணவர் ஒவ்வொருவரையும் கேள்வி கேட்டுக் கொண்டிருந்தார். என்னிடம், ''சிம்லாவில் உனக்குப் பிடிச்சது




எது?'' என்றார். அதற்கு நான் டக்கென்று, ''ஜலதோஷம் சார்!'' என்று சொல்ல, மாணவர்களோடு பேராசிரியரும் சேர்ந்து குபீரென்று சிரித்து விட்டார்...!''

— வலங்கை ஜி. ராஜசேகர், வலங்கைமான்.

○ ○ ○



''சே! இந்தத் 'தின ஒளி' பத்திரிகை ஆசிரியர் என்னை ரொம்பவும் அவமானப்படுத்தி விட்டார்.''

''அப்படி என்ன பண்ணினார்?''

''நான் எழுதி அனுப்பிய கதைகளை 'ஸ்பீட் போஸ்ட்டுல' திருப்பி அனுப்பிச்சிருக்கார்!''

— வி. ரெங்கநாதன், திருச்சி — 2.

''நம்ம தலைவிக்கும் சதாம் உசேனுக்கும் ஓர் ஒற்றுமை இருக்கு!''

''என்ன அது?''

''எந்த இடத்துல ஒளிஞ்சிருக்காங்கன்னு கண்டுபிடிக்கவே முடியாதே!''

— அ. அப்துல்பரீது, திருப்பத்தூர்.

○ ○ ○



ஹெட்கிளார்க்: சார்... ஆபீஸ் நேரத்திலே தூங்கறவங்களை 'லிஸ்ட்' எடுக்கச் சொல்லி 'சர்க்குலர்' வந்திருக்கு!

மானேஜர்: எடேன்யா... இதுக்கெல்லாம் போய் என்னை எழுப்பிக்கிட்டிருக்கணுமா என்ன?

— ஜி. வெங்கட்ராமன், நெய்வேலி — 3.

○ ○ ○

○○ நண்பர் ஒருவரோடு முதல் வகுப்பில் சினிமா பார்க்கச் சென்றிருந்தேன். பாதிப் படத்தில் 'கரெண்ட்' கட் ஆக, கீழ் வகுப்பு, ரசிகர்களிடமிருந்து வந்த விசில் சப்தம் காதைப் பிளந்தது.

உடனே என் நண்பர், ''இதுக்குத்தான் முதல் வகுப்புல சினிமாப் பார்க்க வரக்கூடாதுன்றது... இப்ப என்னாச்சு பார்த்தியா?'' என்று என்னிடம் சலிப்பாய்ச் சொன்னார்.

''கரெண்ட் நமக்கு மட்டுமா போச்சு; எல்லோருக்கும்தானே போச்சு?'' என்று நான் அவரிடம் கேட்டேன்.

அதற்கு நண்பர், ''அட, கரெண்ட் போனதைப் பத்தி ஒண்ணுமில்லைப்பா; நாமும் இரண்டாம் வகுப்பில் உட்கார்ந்திருந்தால் இப்போது அவர்க






னோடு சேர்ந்து விசில் அடித்திருக்கலாமில்லையா?'' என்று போட்டாரே, ஒரு போடு!

— ஜி. டி. ராஜா, சென்னை — 28.

ｏ ｏ ｏ




இரு ஆசிரியர்கள் தங்கள் மாறுதலைப் பற்றிப் பேசிக் கொண்டார்கள்!

"'அப்ளை' செய்தீர்களே, 'ரிப்ளை' வந்ததா?''

''இல்லை. 'சப்ளை' எதிர்பார்க்கிறார்கள் போல் இருக்கிறது!''

— அ. ஷண்முகசுந்தரம், சிட்லபாக்கம்.

ｏ ｏ ｏ




ｏｏ நான் பள்ளியில் படித்த போது, நாராயணன் என்பவர் எங்கள் வகுப்பாசிரியராக இருந்தார். அவரை மாணவர்கள் எல்லோரும் 'நாணா சார்' என்றுதான் அழைப்போம். ஒருநாள் வகுப்பு நடந்து கொண்டிருந்த போது, மாணவன் ஒருவன் பாடத்தைக் கவனிக்காமல் சிரித்துப் பேசிக் கொண்டிருக்க, ஆசிரியர் உடனே அம்மாணவனைப் பார்த்து, ''டேய், பைத்தியம்! பெஞ்சு மேலே ஏறு!'' என்று அதட்டினார். அம்மாணவன் பெஞ்சின் மேலே ஏறி நின்று, ''நாணா சார் பைத்தியம்!'' என்று 'நாணா சார் பைத்தியம்' என்ற தொனியில் குரலெழுப்ப, வகுப்பறையே சிரிப்பலையில் அதிர்ந்தது!

— என். சம்பத், திருச்சி — 2.

ｏ ｏ ｏ

ｏｏ நானும் என் நண்பன் ஒருவனும் வேறொரு நண்பன் வீட்டிற்குச் சென்றிருந்தோம். என்னுடன் வந்த நண்பன் நல்ல சாப்பாட்டு ராமன். நண்பன் வீட்டில் நண்பனின் தாயார் எங்களுக்கு உணவு பரிமாறினார். எங்களைப் பார்த்து, ''கூச்சப்படாமல் சாப்பிடுங்கப்பா,'' என்றார். உடனே நான், ''நீங்கள்தான் கூச்சப்படாமல் பரிமாற வேண்டி வரும்!'' என்று கூறியதும், அனைவரும் சிரித்து விட்டனர்.

— ஆர். ரங்கதுரை, சென்னை — 1.

ｏ ｏ ｏ




ｏｏ மக்கள் தொகைக் கணக்கெடுப்பதைக் கவனித்துக் கொண்டிருந்த எங்கள் வீட்டு வாண்டு, ''ரேஷன் கார்டைப் பார்த்து எழுதிக் கொள்ளலாமே, ஏன் கூடாது?''என்று கேட்டது. திண்ணையில் படுத்திருந்த தாத்தா, ''அப்புறம் அது இந்தியாவின் மக்கள் தொகையாக இருக்காது; சீனாவின் மக்கள் தொகையை விட அதிகமாக இருக்கும்!''

— இந்து கோபால், சென்னை — 92.

ｏ ｏ ｏ




ｏｏ பட்டிமன்றம் நன்றாகச் சூடு பிடித்துக் கொண்டிருந்த நேரத்தில், எதிர்க்கட்சிக்காகப் பேச வந்த பெண் பேச்சாளர் நடுவரைப் பார்த்து, சற்று வித்தியாசமாக ''சபாநாயகர் அவர்களே!'' என்றார். அதைக் கேட்ட நடுவர், ''நம்மால அடியெல்லாம் வாங்க முடியாதும்மா!'' என்றதும் சபையே அதிர்ந்தது.

— டி. சுப்பிரமணியன், மதுரை — 20.




# நோயாளிகளுக்கும் உரிமைகள் உண்டு

மருத்துவ சேவையை உபயோகித்துக் கொள்பவர்கள் என்கிற முறையில், நோயாளிகளும் . உபயோகிப்பாளர்கள் தான். எனவே, நோயாளிகளுக்கும் சில உரிமைகள் உண்டு என்பதும் டாக்டர்கள் தவறு செய்யும் போது அதைத் தட்டிக் கேட்கவும் நஷ்ட ஈடுகள் பெறவும் முடியும் என்பதும் நம்மில் பலருக்குத் தெரிவதேயில்லை.

கடந்த 88 இல் ஒருவர் தமது ஒரு வருடம் ஒன்பதுமாதமான குழந்தையை டாக்டரிடம் எடுத்துச் சென்றிருக்கிறார். டாக்டர் அக் குழந்தைக்கு ஊசி போடும் போது ஊசியின் முனை உடைந்து, குழந்தையின் உடலுக் குள்ளேயே தங்கி விட்டது. பெற்றோர் பதறிப் போக, உடனே அந்த டாக்டர், அரசு மருத்து மனையில் பணிபுரியும் தமது சக டாக்டர் ஒருவருக்குக் கடிதம் கொடுத்து அனுப்பிவிட்டார்.

குழந்தையை அவரிடம் எடுத்துச் சென்ற போது, அந்த அரசு மருத்துவ மனையில் வசதிகள் இல்லையென்று சொல்லி, அந்த டாக்டர் தனியார் மருத்துவ மனைக்குக் குழந்தையைச் கொண்டு போகும்படி சொல்லி விட்டார். நேரமாக நேரமாக, உடலுக்குள் உடைந்த ஊசியின் முனை ரத்த நாளத்தில் கலந்து இதயத்திற்கே சென்று விடும் அபாயம் உள்ளதால், அவசர அவசர மாகப் பெற்றோரும் தனியார் மருத்துவ மனையொன்றில் குழந்தையைக் கொண்டு போய்ச் சேர்த்தார்கள்.

அங்கு ஓர் ஆச்சரியம் என்ன வென்றால், தனியார் மருத்துவமனைக்கு எடுத்துச் செல் லும்படி சிபாரிசு செய்த அதே டாக்டர்தான் அப்போது அந்தத் தனியார் மருத்துவ மனைக்கு வந்து, குழந்தையின் உடலிலிருந்த ஊசியை வெளியே எடுத்திருக்கிறார்!

சாதாரணமாக ஒரு டாக்டரின் தவறால் அல்லது கவனக் குறைவால் ஏற்பட்ட பிரச் னையைத் தீர்க்கும் இன்னொரு டாக்டர் அதற்குப் பணமேதும் வாங்க மாட்டார் என் றாலும் இந்தக் குழந்தையின் விஷயத்தில், ஆபரேஷனுக்காக இரண்டாயிரம் ரூபாயும் மருத்துவமனைச் செலவுகளுக்காக ஆயிரத் தைந்நூறு ரூபாயும் சார்ஜ் செய்திருக்கிறார் கள்.

இது எங்கள் 'தமிழ்நாடு உபயோகிப் பாளர் பாதுகாப்புக் குழு'வின் கவனத் திற்குக் கொண்டு வரப்பட்டது. உடனே நாங்கள் செயலில் இறங்கினோம்.

இதுமாதிரியான விஷயங்களில் ஆதாரங்கள் முக்கியம்என்பதால்முதலில் அதைச் சேகரித் தோம். முதலில் அந்த டாக்டர் செய்த பிரிஸ்

கிரிப்ஷன், சக டாக்டருக்குக் கொடுத்த கடிதம், குழந்தையின் உடலில் ஊசியிருந்ததற்கான ஆதாரமாக அதன் எக்ஸ்—ரே, ஆஸ்பத்திரி பில்கள் டாக்டர் அறிக்கை என்று பலவற்றையும் பத்திரப்படுத்தினோம்.

பிறகு, முதலில் ஊசிபோட்ட டாக்டருக்கு நடந்தவற்றை எழுதினோம். அதில் அவர் தமது தவறுக்கு வருந்தாததையும் செலவுகளை ஏற்றுக் கொள்ள முன்வராததையும் குறிப்பிட்டு, அவரது கவனக் குறைவால் ஏற்பட்ட விஷயம் என்ற முறையில் காவல் துறையிலும் தொழில் முறைத் தவறு என்பதால் இந்தியன் மெடிகல் கவுன்சிலிலும், நியாயமற்ற சேவை என்ற முறையில் MRTP கமிஷனிலும், சேவையில் குறை என்ற முறையில் மாவட்ட உபயோகிப்பாளர் குறை தீர்க்கும் மன்றத்திலும் புகார்கள் கொடுக்க முடியும் என்றும் எழுதினோம்.

எனவே, அந்த டாக்டர் அக்குழந்தையின் பெற்றோருக்கு இருபதாயிரம் ரூபாய் நஷ்ட ஈடுதர வேண்டுமென்றும் நஷ்ட ஈடுதர ஒப்புக் கொள்ளாவிட்டால், எங்களை எதிர்த்து நீதிமன்றத்தில் வழக்காடலாம் என்றும் எழுதியிருந்தோம்.

உடனடியாக அந்த டாக்டர் எங்கள் குழுவுக்கு வந்து, சம்பந்தப்பட்ட பெற்றோரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு, இருபதாயிரம் ரூபாய் நஷ்ட ஈடு கொடுத்ததோடு, எதிர்காலத்தில் மிகவும் எச்சரிக்கையாக நடந்து கொள்வதாகவும் உறுதிமொழி கொடுத்துவிட்டுச் சென்றார்.

அதன் பிறகு மருத்துவச் சேவை தொடர்பாக நாங்கள் பல வழக்குகளைச் சந்தித்திருந்தாலும் இந்த வழக்குதான் இதுபோன்ற தவறுக்கான நஷ்ட ஈட்டுக்கு முன்னோடி என்று சொல்லலாம்.

சில தவறுகள் அங்கொன்றும் இங்கொன்றுமாக நடக்கிறது என்பதாலேயே நாம் எல்லா டாக்டர்களையும் மருத்துவமனைகளையும் சந்தேகத்தோடு பார்க்க வேண்டியதில்லை. மனப்பூர்வமான சேவை மனப்பான்மையோடு பணி புரியும் டாக்டர்களும் மருத்துவ மனைகளும் இருப்பதை நாம் மறந்து விடக்கூடாது. ஆயினும் டாக்டர்கள் தவறு செய்யும் போது அதைத் தட்டிக் கேட்கிற உரிமை—நஷ்ட ஈடுபெறும் உரிமை நமக்கு இருக்கிறது என்பது மேல் நாடுகளுக்குத்தான் பொருந்தும் என்பதில்லை; நமக்கும் அந்த உரிமை இருக்கிறது!

— புஷ்பவனம்

செயலாளர்,
தமிழ்நாடு உபயோகிப்பாளர்
பாதுகாப்புக் குழு,
2, ராணா பில்டிங்,
தில்லை நகர் மெயின் ரோடு,
திருச்சி — 600 018.



# டாக்டரைப் பார்க்கப் போகும்போது...

ஒரு நோயாளியைப் பரிசோதித்துப் பார்க்க மருத்துவருக்கு ஐந்தரை முதல் ஆறு நிமிடங்களே தேவை என்று ராயல் காலேஜ் அஃப் ஜெனரல் பிராக்டிஷனர்ஸ் கணக்கிட்டிருக்கிறது. சில கேசுகளில் டாக்டர் அதிக நேரம் எடுத்துக் கொள்ளலாம். டாக்டர் ஒரு முடிவுக்கு வர, அவரை அதிகம் குழப்பாமல் இருப்பதும் ஒரு நோயாளியின் கடமை! இதோ சில குறிப்புகள் :

- சுற்றி வளைத்துச் சொல்லிக் கொண்டிருக்காமல், நேரடியாக உங்கள் குறைகளைச் சொல்லுங்கள்.
- டாக்டர் கேட்கும் கேள்விகளுக்கு முழுமையாகவும், உண்மையாகவும் பதில் சொல்லுங்கள்.
- டாக்டர் இந்த நோய்தான் வந்திருக்கிறது என்று சொல்லுவார் என்று முன்னாலேயே தீர்மானித்துக் கொண்டு போகாதீர்கள்.
- நீங்கள் எதிர்பார்த்தபடி சிகிச்சை முறை இல்லையே என்று டாக்டரிடம் வருத்தம் கொள்ளாதீர்கள். என்ன நோய்க்கு எந்த முறை மருத்துவம் நல்லது என்று அவருக்குத் தெரியும்.
- டாக்டர் என்ன கண்டுபிடித்திருக்கிறார் என்றோ, அவர் அளிக்கப் போகும் சிகிச்சை பற்றியோ உங்களுக்கு ஏதாவது விளக்கம் தேவைப்பட்டால், அவரிடம் தயங்காமல் கேளுங்கள். உடம்பு உங்களுடையது!
- உங்கள் குடும்ப டாக்டரோடு எப்போதும் தொடர்பு வைத்திருங்கள்.
- பிரச்னை பெரிதாகிற வரை காத்திராமல், உங்களுக்கு நோய் பற்றிய சந்தேகம் எழுந்தவுடனேயே டாக்டரைச் சென்று பார்த்து விடுங்கள். அதுதான் நல்லது.

ஆதாரம்: 'ஃபேமிலி ஹெல்த் கைடு'



# மருந்தில்லாமலே நோய்களை விரட்டலாம்

"**கா**ய்ச்சல் — தலைவலி போன்றவற்றைப் பலரும் நோய்கள் என்றே நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். உண்மையில், அவை நோய்களல்ல; நோய்களின் அறிகுறிகள் மட்டுமே! உதாரணத்திற்குத் தலைவலியை எடுத்துக் கொள்ளுங்கள். அது டென்ஷனால் கூட வந்திருக்கும். ஆக, தலைவலியைப் போக்க வேண்டுமானால் டென்ஷனிலிருந்து நீங்கள் விடுபட்டாக வேண்டும். அதை மறந்து விட்டுத் தலைவலி மாத்திரைகளைச் சாப்பிடுவதில் என்ன பயன்? அனாவசியமான அந்த மாத்திரைகளால் ஏற்படும் பின்விளைவுகள் நம்மைப் பாதிப்பதுதான் மிச்சம்!" என்கிறார்கள் இயற்கை மருத்துவச் சிகிச்சையளித்து வரும் லலிதா — முரளி தம்பதி.

"இயற்கை மருத்துவம் என்றால் என்ன?".

"இயற்கை மருத்துவம் என்பது மருந்தில்லாமல் குணப்படுத்துவது. தேவைப்பட்டால் மூலிகைகளை மட்டுமே பயன்படுத்துவது; செயற்கை மருந்துகளை ஒரு போதும் பயன் படுத்துவதில்லை."

"அப்படி நீங்கள் என்னதான் செய்கிறீர்கள்?"

"முதலில் இங்கே வருபவர்களின் சூழ்நிலை மற்றும் அவர்களது பிரச்னைகளைத் தெரிந்து கொள்கிறோம். உடல் ஆரோக்கியத்திற்கு மன ஆரோக்கியம் மிகவும் முக்கியமல்லவா! அப்புறம் தான் ஒவ்வொருவருடைய தேவைக்குத் தகுந்தபடி யோகாசனப் பயிற்சிகளைச் சொல்லித் தருகிறோம். மனத்தை ஒரு நிலைப் படுத்தவும், மன அமைதிக்கும் தியானம் சொல்லித் தருகிறோம். இதிலேயே பாதி நோய் குணமாகிவிடும்!

"பிறகு உணவுப் பழக்கம், காப்பி, டீ போன்ற பானங்களையும், கிழங்கு வகைகளையும், முட்டை உள்பட எல்லா அசைவ உணவுப் பழக்கத்தையும் மற்ற கெட்ட பழக்கங்களையும் சிறிது சிறிதாகத் தவிர்க்கச் சொல்கிறோம். யோகாசனப் பயிற்சி, தியானம், உணவுக் கட்டுப்பாடு இவற்றை ஒழுங்காகக் கடைப்பிடித்தாலே போதும்; நோய்கள் பறந்தோடிவிடும்!

"நம்முடைய முன்னோர்கள் 'வைகறைத் துயிலெழு' என்று சொன்னது நம்முடைய ஆரோக்கியத்திற்காகத்தான். வைகறைப் பொழுதில்தான் காற்று மண்டலத்தில் ஓசோன் அதிகமாக இருக்கிறது. அப்போது எழுந்து பிராணாயாமம் செய்வது மிக மிக நல்லது என்பதற்காகத்தான் அப்படிச் சொன்னார்கள். அதே போன்றதுதான் சூரிய நமஸ்காரம் செய்வதும். அது கண் சம்பந்தப்பட்ட விஷயமென்றே பலரும் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். உண்மை அதுவல்ல; காலைச் சூரியனின் கிரணங்கள் நமது கண்களின் வழியாகத் தலைக்குள் இருக்கும்பிட்யூட்டரிசுரப்பியைச் சென்றடைகிறது. அது உடலின் மிக முக்கியமான சுரப்பியான பிட்யூட்டரிக்கு மிகவும் நல்லது என்பதற்காகத்தான் சூரிய நமஸ்காரம் செய்யச் சொன்னார்கள்.

"இவற்றோடு, காலை எழுந்தவுடன் மனத்துக்குள் சந்தோஷமான — உற்சாகமான எண்ணங்களுக்கே இடம் கொடுத்தோமானால், நோய்கள் நம்மைக் கண்டு அஞ்சி ஓடும்!" என்கிறார்கள் அவர்கள்.

— நமது நிருபர்

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கெ. ராஜேந்திரன். இணை ஆசிரியர்: சீதா ரவி.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/-; விமானத் தபால் ரூ. 350/-

நான் ஸின்த்தால் உபயோகிக்கிறேன். நீங்கள்?




வினோதின் உடலுக்கும் உள்ளத்திற்கும் தன்னம்பிக்கை தருவது ஸின்த்தால்.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka

# உயர் நட்சத்திரத் தரம்




நல்லொளி பரப்பிலே நம்பர் 1 : ஸீமா.
நட்சத்திர நடிகை நம்பர் 1 : ஸ்ரீதேவி.
சரிநிகர் மின்னும் இலட்சியத் தரம் :
உச்ச நட்சத்திரம்.
நீடிக்கும் சுடரொளியின் ஆதிக்கம்,
போற்றப்படும் இரு மணிகள்...
ஆற்றல் இருப்பதால் ஊற்றெடுப்பவை
உயர்வினாலே உச்சத்தில் ஆள்பவை.

# ஸீமா®




## பல்பு, டியூப்லைட்